## கலைக் களஞ்சியம்

# பவழத்தீவுக்குப் போனதுண்டா?

**முந்திரி மரத்தின்** பூர்வீகம் தெரியுமா? தென் அமெரிக்கா தான். நானூறு ஆண்டுகளுக்கு முன் போர்ச்சுக்கீசியர் இதனை இந்தியாவுக்குக் கொண்டு வந்தனர்.

'காஸ்மிக் ரேஸ்' என்பதற்கு தமிழ் என்னவாக இருக்கும் என்கிறீர்கள்? **விசுவக் கதிர்கள்** இவை வான வெளியிலிருந்து வருகின்றன. அதிக மின்சாரம் கொண்டவை. பூமியிலிருந்து உயரே போகப் போக இவற்றின் செறிவு அதிகம்.

பவளத் தீவுக் கதை படித்ததுண்டல்லவா? நிஜமான பவளத் தீவுகள் எவை? **ஹவாயி தீவுகள்** தான். இவை ஒரு காலத்தில் சமுத்திரத்தின் அடியில் உள்ள எரிமலைகளின் முகடுகளாய் இருந்தன. பவளம் என்ற பூச்சிகளின் கூடுகள் அடுக்கடுக்காக ஒன்று சேர்ந்து இம்முகடுகள் பெரிதாகித் தீவுகள் போலாகி விட்டன.

**தேக்கு மரத்துக்கு** என்ன வயதிருக்கும்?— சொல்வதற்கில்லை. பல நூற்றாண்டுகளுக்கு முன் கட்டப்பட்ட சில தென்னக கோயில்களின் உத்திரங்கள் வைரம் பாய்ந்த தேக்கினால் ஆனவையே.

**வலசை** என்னும் தமிழ்ச் சொல்லுக்கு ஆங்கிலம் என்ன? Migration ஆர்க்டிக்வட்டத்திலிருந்து அன்டார்டிகாவுக்கு ஒவ்வொரு ஆண்டும் வேனிற்காலத்தின் போது உல்லாசமாய் வலசை சென்று திரும்பும் பறவை Tern எனப்படும் ஆற்றுக் குருவி. இது கடக்கும் தூரம் 35,000 கிலோ மீட்டர்.

**உருளைக்கிழங்கு** எதற்கு உதவும்? கறி சமைக்க.... அதுதான் தெரிந்த ஒன்றாயிற்றே. செயற்கை ரப்பர், பிளாஸ்டிக், ஒட்டுப் பசை, ஆல்கஹால் ஆகியவை தயாரிக்கவும் உருளைக்கிழங்கு பயன்படுகிறது.

இதோ ஒரு குறிப்பு: கருங்கல்லை உடைத்துத் தூளாக்கி, அத்துடன் சுமார் 12ல் ஒரு பங்கு **ஆஸ்பால்டைக்** கலந்து, சுமார் 200 டிகிரி அளவுக்கு சூடாக்கி நன்றாகக் கலந்து... சமையல் குறிப்பு இல்லை. பின் என்னவாயிருக்கும்? சாலை போடுவது எப்படி என்ற விளக்கம்.

உலகிலேயே மிகச் சிறிய நாடு எது என்கிறீர்கள்? இதன் பரப்பு சுமார் ஒன்றரை சதுர கிலோ மீட்டர்தான்! பிரான்ஸின் தென் கடற் கரையில் உள்ள **மொனாக்கோவை** இப்பெருமை சேரும்.

மேற்கண்டது போல் ஆயிரக் கணக்கான அரிய தகவல்களை அளிப்பது ''**குழந்தைகள் கலைக் களஞ்சியம்**''. வண்ணப் படங்களும் வழவழ அட்டையும், வெள்ளைத் தாளும் தெளிவான அச்சடிப்புமாய் மின்னும் பத்துப் பாகங்களையுடைய இத்தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடு, குழந்தைக் குலம் குதூகலிக்க ஆற்றப்பட்டுள்ள ஓர் அரிய தொண்டாகும். வாங்கப் பயனடையத் தொடர்பு கொள்ளுங்கள் :

**தமிழ் வளர்ச்சிக் கழக அலுவலகம், தபால் பெட்டி எண் 439, பல்கலைக்கழகக் கட்டிடம், சென்னை-5**

தொகுப்பு: **சீதா ரவி**

**குறிப்பு: பத்து புத்தகங்களையும் வாங்குவோருக்குத் தமிழ்க் கலைக் களஞ்சியம் பத்தாவது வால்யூம் இலவசமாகத் தரப்படும்.**







# மாருதி வாங்கினேன்...

''முதல் நாள் டெலிவரி எடுத்த அன்று வழக்கமாக அம்பாஸடர் ஓட்டுகிற ஞாபகத்தில் ஆக்ஸிலேட்டரில் காலை அழுத்தினேன். ஜிவ்வென்று கிளம்பி விட்டது வண்டி. கால் விரல் நுனி பட்டால் போதும், மாருதி நிஜமாகவே வாயு வேகம்தான்!'' என்கிறார் சமீபத்தில் மாருதி கார் வாங்கிய ஸ்பெக்ட்ரம் கலர் லாப் அதிபர் **திரு. திவாகர்**

'மாருதியில் விசேஷமாக என்ன இருக்கிறது?'

- விண்ட் ஸ்கிரீன் கண்ணாடியைத் துடைக்க ஒரு ஸ்ப்ரேயர்; பட்டனை அழுத்தினால் மெல்லிய ஊசி முனை நீரூற்றுத் தோன்றி, கண்ணாடி முழுதும் வீசுகிறது. துடைத்து விட்டால் கண்ணாடி பளிச்.

- இன்ஜின் சூடு காலைப் பொசுக்காமல் இருக்க, உள்ளே காலடியில் குளிர்காற்றை வீசும் ஏர்-ப்ளோயர்.

- ஹெட் லைட் ஸ்விச், டிம்-டிப், டேஷ் போர்டு ஸ்விச் எல்லா கண்ட்ரோல்களும் ஸ்டீயரிங் வட்டத்துடன் இணைந்த பிடியிலேயே இருக்கின்றன.

- மணிக்கு நூறு கிலோ மீட்டர் வேகம் வெகு எளிதாகப் போகலாம். காரணம்: ஹை ஸ்பீட் இஞ்சின்.

- ஷாக் அப்சார்பர் அல்லது சஸ்பென்ஷன் சிஸ்டம் இதில் வெகு உயர்வான அம்சம். அதிர்ச்சி ஏதும் ஏற்பட்டால் சஸ்பென்ஷன் சிஸ்டம் முழுவதுமாக அதைத் தாங்கிக்கொள்கிறது.

- ரேடியேட்டருக்குத் தண்ணீர் தேவைப்படுமா என்று தினசரி பானட்டைத் திறந்து பார்க்க வேண்டிய அவசியமில்லை. ஒரு பச்சை நிற சொல்யூஷன் பாட்டில், பானட் உள்ளேயே இருக்கிறது, ரேடியேடருக்கு ஒரு குழாய் இணைப்புடன். அது கவனித்துக் கொள்ளும் ரேடியேடரை.

- லாக்கிங் ஸிஸ்டம் (பூட்டு அமைப்பு) நேர்த்தியான ஒன்று. காரைப் பூட்ட, உள்ளே இருக்கும் 'லாட்சை'ப் போட்டு விட்டுக் கதவைச் சாத்தினால் போதும். ஃப்ரிட்ஜ் கதவு மாதிரி தானாகவே மூடிக் கொள்கிறது. அறைந்து சாத்த வேண்டியதில்லை.

''மாருதி போகும்போது பலர் நின்று பார்ப்பதும், நிறுத்தியிருக்கும்போது நிறையப்பேர் அதைச் சூழ்ந்து கொண்டு சுவாரஸ்யமாக விவாதிப்பதும், தொட்டுப் பார்ப்பதும், இப்போது சகஜமாகி விட்டது'' என்கிறார் திரு திவாகர்.

நிறைகளைச் சொல்லியாயிற்று. குறைகள் ஏதும்.....? இருக்கின்றன.

- ஒரு லிட்டர் பெட்ரோலுக்கு 20 கிலோ மீட்டர் தரும் என்றார்களே? பதிமூன்று அல்லது பதினான்குதான் தருகிறது.

- பின் ஸீட்டில் அமர்ந்து பயணம் செய்வதைப் போல்வேறு தண்டனை கிடையாது. (உட்கார்ந்து பார்த்தேன். காலை வைத்துக்கொள்ளக் கஷ்டமாகத்தான் இருக்கிறது. இட நெருக்கடி.) முன் ஸீட் மட்டும் ரொம்ப சௌகரியம்தான். அதிலும் நெடுந் தூரப் பயணத்துக்கு ஸீட்டை இன்னும் தழைவாகப் பொருத்தி சாய்ந்து கொண்டு (ஏறக் குறைய தூளியில் படுத்த



மாதிரி) ஓட்டிக் கொண்டு போகலாம். தூங்கிப் போய்விடாமல் இருப்பது நல்லது.

- லக்கேஜ் பிட அல்லது டிக்கி சிறியது. மற்ற கார்கள் போல் கண்டதை யெல்லாம் போட்டு அடைக்க முடியாது. மர்மக் கதைகள் அல்லது திகில் படங்களில் வருவது போல் டிக்கியில் யாரும் ஒளிந்து கொள்ள முடியாது.

- நான்கு பேர் அமரும் கார்தான் என்றாலும் சௌகரியமாக இரண்டு பேர் பயணம் செய்யலாம் — அவ்வளவுதான்.

- கியர் அம்பாஸடர், பியட் போல ஸ்டீயரிங் கோடு இணைந்ததல்ல. ஹெரால்ட் போல நீப்ளோர்-கியர். கியரை மாற்றும் போது பக்கத்தில் அமர்ந்திருப்பவரின் காலை இடிக்க வேண்டிய தர்ம சங்கடமான நிலை. (காதலர்கள் நிச்சயம் வரவேற்பார்களே!)

இப்போது 'மாருதி'யில் பன்னிரண்டு சதவீதம் இந்தியப் பாகங்கள்; மீதி எண்பத்தெட்டு ஜப்பானியச் சரக்குகள். எதெல்லாம் இந்திய பாகங்கள் என்று தெரிந்து கொள்ள விரும்புபவர்களுக்கு:

டயர்

பேட்டரி

ஹாரன்

விண்ட் ஸ்க்ரீன் கண்ணாடி

முப்பத்தைந்து சதவீதம் இந்திய பாகங்கள் கூடிய சீக்கிரம் வந்துவிடுமாம்.

விலை: ரூ. 57081. விமானத்தில் வந்தால் இன்னும் ஒரு எழுநூறு ரூபாய் கூட ஆகும். ரிஜிஸ்தர் செய்துகொண்ட சிலர் கார் அலாட் ஆனதும் விற்றுவிடுகிறார்களா? பிரீமியம் எவ்வளவு? இன்னொரு மாருதி விலை கேட்கிறார்கள் என்பது ஒரு செய்திப் பத்திரிகை கிளப்பி விட்ட வதந்தி. அதில் பாதி கூட இல்லை என்று விஷயமறிந்த வட்டாரங்கள் தெரிவிக்கின்றன.

குறித்த காலக் கெடுவுக்குள் கார்கள் வந்து சேர்ந்து உரிமையாளர்களை அடைகின்றனவா?

சரியாகக் குறிக்கப்படாத பிள்ளைப் பேறுக் காலம் மாதிரி ஒரு மாதம் தள்ளியே போகிறது. குறித்த நாளுக்குச் சரியாகக் கிடைப்பதில்லையாம். (என்னதான் ஜப்பான் தயாரிப்பு என்றாலும் இந்தியாவுக்கு வந்தால் தாமதம் தவிர்க்க முடிவதில்லை போலிருக்கிறது.)

பேட்டி: **சித்தார்த்**

மேலட்டையில்: வித்யோதயா பள்ளி ப்ளஸ்-டூ மாணவி **குமாரி வித்யா சுப்ரமணியம்** இவருடைய ப்ளஸ் டூ அம்சங்கள்: பரத நாட்டியம், ஸ்விம்மிங்.

வண்ணப் படம், புகைப்படங்கள்: **சுபா**

---

# ஐயோ பாவம், ஆலயங்கள்!

"கடந்த ஐம்பது ஆண்டுகளில் தமிழகக் கோவில்களிலிருந்து களவுபோன சிலைகளின் விலை மதிப்பு சுமார் ஐநூறு கோடி ரூபாய் இருக்காலம். இதில் ஆபரணங்களும் சேரும்" என்கிறார் திரு வி. எஸ். ஸ்ரீகுமார்: இந்துக் கோவில்கள் பாதுகாப்புக் குழுத் தலைவர்.

கோயில்களின் சொத்துக்களும் நிலங்களும் பிறர் கைகளுக்குப் போய், அவர்கள் சொந்த பாத்தியதை கொண்டாடி வரும் அவலநிலை யில், அதற்குரிய கோயில்களோ நித்திய பூஜையும் இன்றி, ஒரு விளக்கேற்றக் கூட வழியில்லாமல் சீரழியும் அவலத்தை வேதனையோடு சுட்டிக் காட்டுகிறார் திரு. ஸ்ரீகுமார்.

**எப்படி ஐநூறு கோடி ரூபாய் என்கிறீர்கள்?**

இரண்டு வருடங்களுக்கு முன்னால் நிதி யமைச்சர் நெடுஞ்செழியன் இது பற்றிப் பேசும்போது, '1973லிருந்து 200 கோடி ரூபாய்க்குக் கோயில் சிலைகள் திருட்டுப் போயிருக்கின்றன' என்று சொன்னார். சமீபத்தில் லோக் சபாவில் கூட, இந்த மூன்று வருடங்களில் போலீஸ் கேஸ்களாகப் பதிவு செய்யப்பட்ட வழக்குகளில் நூற்றுக்கு மேற்பட்ட சிலைகள் தமிழ்நாட்டிலிருந்து திருட்டுப்போயிருக்கின்றன என்றார்கள். அதாவது சிலை திருடு போய், போலீஸ் வழக்குப் பதிவு செய்தவை மட்டும் நூற்றுக்கு மேல்; போலீஸில் பதிவாகாத கேஸ்கள் எத்தனை எத்தனையோ

மேலோட்டமாக ஒரு கணக்கு எடுத்ததில் கிராமங்களில் உள்ள கோயில்களிலிருந்து சோழர், பல்லவர் காலத்துச் சிலைகளும் சிற்பங்களும்மட்டும் வருஷத்துக்குக் குறைந்த பட்சம் ஐநூறு – அதிகபட்சம் ஆயிரம்வரை – திருட்டுப் போகிறது என்று அறிந்து கொண் டோம். இது தவிர, நகை நட்டுக்கள், பூஜைப் பாத்திரங்கள், வேலைப்பாடுள்ள பொருள்கள், தேரிலிருந்து எடுக்கப்பட்ட சிற்பங்கள் எல்லாம் களவு போகின்றன. சாதாரணமாக ஐந்து நட்சத்திர ஹோட்டல் களில் அலங்காரக் கதவுகளாக, பழைய காலத்து வேலைப்பாடமைந்த மரக் கதவுகள் போல வைக்கிறார்களே, இவற்றின் விலையே ஆயிரக் கணக்கில் ஆகிறது என்றால், பழமை யான இந்த மரச் சிற்பங்களின் விலையை நீங்களே ஊகிக்கலாம்.

**அப்படியானால் யார் ஆலய நிர்வாகம் செய்ய வேண்டும்?**

ஆலய நிர்வாகம் சம்பந்தப்பட்டவர்கள் அடிப்படையாக நேர்மையானவர்களாக இருக்க வேண்டும். இது மிக முக்கியம்.



○ ஆதிகேசவப் பெருமாள் கோயில் குளம் (படம்: சுபா)





பாவ-புண்ணியத்திற்குப் பயந்தவர்கள்தான் ஆலய நிர்வாகம் செய்ய வர வேண்டும்.

எக்ஸிக்யூட்டிவ் ஆபீசர் அலுவலகத்திலேயே பிரியாணியும் மாமிசமும் கொண்டு வந்து சாப்பிடுகிறார்கள். டிரஸ்டிகளில் பல பேர் குடித்துவிட்டுத்தான் நிர்வாகக் கமிட்டி கூட்டத்துக்கே வருகிறார்கள். இவர்கள் எல்லாம் 'கட்சி'க்காரர்கள். அதனால் இவர்களை ஒன்றும் செய்து கொள்ள முடியாது.

டிரஸ்டிகளுக்குப் பதிலாக, தக்கார் (Fit person) முறையைக் கொண்டு வந்திருக்கிறார்கள் சில கோயில்களில். இவர்கள் நிர்வாகம் நேர்த்தியாக இருக்கிறது. இதை ஒரு முறை காஞ்சிப் பெரியவர்கூடப் பாராட்டினார். ஆனால் இதையும் மாற்ற முயற்சி நடந்து கொண்டிருக்கிறது. கட்சியைச் சேர்ந்தவர்களைத் திருப்திப் படுத்த வேண்டிய திட்டம் இருக்கலாம், இல்லையா?

**கோயில் நிலங்கள் பறிபோனது எப்படி?**

சென்னை நகரை எடுத்துக் கொள்ளுங்கள். ஆதிநாளிலிருந்தே இருபத்தைந்து சதவிகித நிலம் கோயில்களைச் சேர்ந்ததாகத்தான் இருந்தது. -- அது கோவிந்தப்ப நாயக்கன் தெருவாகட்டும், கொத்தவால்சாவடி பகுதி ஆகட்டும், பூந்தமல்லி நெடுஞ்சாலை ஆகட்டும், தியாகராய நகராகட்டும். இவ்வளவு நிலச் சொத்துக்களில் இப்போது கோயில் பட்டாக்களில் இருப்பது பத்து சதவீதம் கூட இல்லையே!

பழைய நாட்களில் டிரஸ்டிகள் என்ன செய்தார்கள்? 99 வருட லீஸுக்கு கோயில் சொத்துக்களைக் கொடுத்தார்கள். ஒரு கிரவுண்டுக்கு ஒரு ரூபாய்க்கு எழுதிக் கொடுத்திருக்கிறார்கள்! அதுவும் ஒழுங்காக வருவதில்லை. வசூலாவதில்லை. அதிகம் பேரும் அந்த நிலங்களில் கட்டடங்கள் கட்டி, பட்டாவையும்மாற்றிக்கொண்டுவிட்டார்கள் கார்ப்பரேஷன் ரிக்கார்டுகளையெல்லாம் கூட மாற்றிக் கொண்டு விட்டார்கள். இவற்றில் பாதிக்கு அரசாங்கத்திடம் விவரங்கள் எல்லாம் இருக்கின்றன. அமைச்சர் திரு வீரப்பன் அவர்களைப் பொறுத்தவரை, அவற்றில் எப்படியும் பாதியாவது திரும்பப் பெற்று விடவேண்டும் என்ற எண்ணம் தீவிரமாக

**சிறப்புப் பேட்டி**

○ வி. என். ஸ்ரீகுமார்

இருக்கிறது அவருக்கு. ஆனால் இதை எப்படிச் செய்வது என்று யோசித்து வருகிறார் போல் இருக்கிறது.

மேற்கு மாம்பலத்தில் உள்ள கோதண்டராமஸ்வாமி ஆலயத்தைச் சேர்ந்த சொத்துக்கள் பார்க்கிட் ரோடு உட்பட, தி. நகர் பகுதியில் பலர் கைகளில் இருக்கின்றன. இன்று அந்த இடங்களுக்கு கிரவுண்டுக்கு எத்தனை லட்சம் ரூபாய் என்று எல்லோருக்கும் தெரியும்.

**இந்தக் கோயில் நிலங்கள், சொத்துக்களுக்கு ஏதாவது கணக்கு இருக்கிறதா?**

அறநிலையத் துறை ஆணையராக திரு யு. சுப்பிரமணியம் இருந்தவரை, எந்தக்

○ ஐம்பது ஆண்டுகளில் 500 கோடி மதிப்புள்ள இது போன்ற சிலைகள் திருட்டுபோயின.



கோயிலுக்கு எத்தனை நிலம், எத்தனை சொத்து என்று தெரியாது. அப்புறம் நாங்கள் கேட்ட பிறகு ஐந்து லட்சம் ஏக்கருக்குச் சற்று அதிகமாகவே இருக்கிறது என்றார்கள். இதில் நீர்ப்பாசன நிலம், காய்ந்த நிலம், தோட்டங்கள் எல்லாம் கணக்குப் போட்டார்கள். கணக்கில் இல்லாது போனது — அதாவது இல்லீகல் பொஸஷனுக்குப் போனது ஒரு லட்சம் ஏக்கராவது இருக்கும்... தற்போது 31.75 கோடி ரூபாய் விவசாயக் குத்தகைப் பணம் பாக்கி வரவேண்டியிருக்கிறது.

பக்தவத்சலம் அவர்கள் ஆட்சி காலத்தில் எல்லா மத நிறுவனங்களைச் சார்ந்த நிலங்களுக்கும் நில உச்சவரம்புச் சட்டத்திலிருந்து விலக்கு அளித்தார்கள். 1967க்குப் பிறகு குடியிருப்புச் சட்டம் வந்ததும், குத்தகைதாரர்களை வெளியேற்ற முடியாதபடி செய்து விட்டார்கள். குத்தகைதாரர்களுக்குப் பாதுகாப்பு மட்டுமல்ல, ஒத்திவைப்பும் அளிக்கப்பட்டது. இது இன்னும் தொடர்ந்து அளிக்கப்பட்டு வருகிறது. ஏனென்றால் குத்தகை எடுத்தவர்கள் எல்லாம் கட்சி ஆட்கள்தான். கலைஞர் கருணாநிதியின் ஆட்சிக் காலத்தில் இவர்களில் பெரும்பான்மையானவர்கள் தி.மு.க.வையும், கம்யூனிஸ்ட் கட்சியையும் சார்ந்த ஆட்களாய் இருந்தார்கள். இன்னொருத்தருக்குக் குத்தகை கொடுத்து, அல்லது சட்டமாயிருந்தால் வாடகைக்கு விட்டுப் பணத்தைத் தாங்களே எடுத்துக் கொள்கிறார்கள். சேரவேண்டிய கோயில்களுக்கு மட்டும் கொடுக்க மாட்டார்கள்!

அ.தி.மு.க. வந்த பிறகு பினாமி எல்லாம் கண்டுபிடித்து ஒரு பகுதியைப் பரந்த அளவில் விநியோகிக்கவும் செய்தார்கள். அப்படியும் குத்தகைதாரருக்குப் பாதுகாப்பு இன்னும் இருக்கிறது. அதனால் கோயிலுக்கு வர வேண்டிய பணம் வரமாட்டேன் என்கிறது. குத்தகைதாரரை வெளியேற்றவும் முடிவதில்லை!

## இப்போது நிலைமை என்ன?

மதச்சார்புள்ள ஸ்தாபனங்களுக்கு உரிமையான நிலங்களுக்கும், சொத்துக்களுக்கும் தமிழ்நாடு குடியிருப்பு — குத்தகைதாரர் பாதுகாப்புச் சட்டத்திலிருந்து விலக்கு அளிக்கக் கேட்டிருக்கிறோம். முதல்வர் எம். ஜி. ஆர். அவர்களும், அமைச்சர் ஆர். எம். வீரப்பன் அவர்களும் கொடுத்து விடுகிறோம் என்றுதான் சொல்லிவருகிறார்கள் — எஸ். டி. எஸ். போன்றோர் எதிர்ப்பு இருந்தாலும் கூட. ஆனால் இவர்கள் சொல்லி மூன்று சட்டசபைக் கூட்டத் தொடர் நடந்து முடிந்த பிறகும் இதுவரை இந்தச் சட்டம் கொண்டு வரப்படவில்லை. அடுத்த தொடரிலாவது கொண்டுவர வேண்டும் என்று கேட்டுக் கொண்டிருக்கிறோம்.

வடநாட்டில் இருப்பவர்கள் மாதிரி நமக்கு உணர்ச்சிபூர்வமான ஒற்றுமை — இமோஷனல் யூனிட்டி — கோயில் விவகாரங்களில் இல்லவே இல்லை. பல தடவை, பல படையெடுப்புக்களைச் சந்திக்க நேர்ந்ததால் அவர்களிடையே உணர்ச்சி பூர்வமான ஒற்றுமை இருக்கிறது. இது இங்கே நமக்கு அவசியம் என்பதை உணர வேண்டும்.

## நிலைமை சீரடைய நீங்கள் என்ன யோசனை வைத்திருக்கிறீர்கள்?

பொதுநல நிதி (Common good Fund) என்று எல்லாக் கோயில்களிலிருந்தும் கிடைக்கும் உபரிப் பணத்தை ஒரே கணக்கில் வைத்து அதிலிருந்து நிதி வசதியின்றித் தவிக்கும் கோயில்களுக்குக் கொடுத்து வரலாம் என்று முன்பு முடிவு செய்தார்கள். இது தி.மு.க. ஆட்சிக் காலத்தில் எப்படி செலவழிக்கப்பட்டது என்று நமக்குத் தெரியும்! தற்போது 38 கோடி ரூபாய் உபரி நிதி இருக்கிறது. இதில் ஐந்து கோடி எடுத்து, பொதுநல நிதியில் வைத்து, அதில் வருகிற வட்டியைக் கொண்டு வசதியற்ற கோயில்களுக்கு உதவலாம். இதில் 70 லட்சம்தான் வரும் வட்டியாக. இது போதாது. கோயில்களின் அறிவிக்கப்பட்ட உபரி நிதியில் இருபத்தைந்திலிருந்து முப்பது சதவீதம் விட்டுவிட்டு, மீதியை யெல்லாம் ஒன்று சேர்த்து, வசதியற்ற கோயில்களுக்குக் கொடுத்து வந்தால் முக்கியமான அன்றாட பிரச்னைகளுக்குத் தீர்வு காண முடியும் என்று நம்புகிறோம்..

## வசதியற்ற கோயில்களுக்கு எப்படி நிதி வழங்குவீர்கள்?

ஒவ்வொரு பகுதியிலும் கடவுள் நம்பிக்கையுள்ள இந்துக்களைக் குழுக்களாக அமைக்க

---



### நற்பெயர்

- மாபெரும் செல்வத்தை விட நல்ல பெயர் சிறந்தது.
  —பைபிள்

- ஒரு புலி இறக்கும்போது தனது தோலை விட்டுச் செல்கிறது. ஒரு மனிதன் இறக்கும்போது தனது நற்பெயரை விட்டுச் செல்கிறான்.
  —ஜப்பான் பழமொழி.

தொகுப்பு: எஸ். முகம்மது யூசுப்




# சுக சவரம்:

இன்று மட்டுமல்ல, நாள் தோறும் இந்தச் சவரத் தொல்லையிலிருந்து எந்த ஆணும் தப்ப முடியாது.

அதனால் சவரம் செய்வதை சுகமாக்க வேண்டும். அதன் மூலம் புத்துணர்ச்சி பெறவேண்டும். அதை அளிக்கிறது கொலோனின் ஸ்பரிசம்.

சுக சவரத்தின் இரகசியமே புத்துணர்ச்சி தரும் கொலோனின் ஸ்பரிசம் அளிக்கும் ஷேவிங் க்ரீம்தான். அதுவே கோத்ரெஜின் தனித்தன்மை.




உங்கள் தேவைக்கு மென்தாலுடனும் கிடைக்கும்.






**கோத்ரெஜ்**
**ஷேவிங் க்ரீம்**

## ஒரு நாள் ஆயுத உற்பத்தியை நிறுத்தினால்....

ஆயுத உற்பத்தியை ஒரு நாள் நிறுத்தினால் 150 கோடி மக்களுக்கு முக்கிய தேவையாகிய குடிநீர் வசதி அளிப்பதற்கோ, உலகெங்கிலும் மலேரியாவை ஒழிப்பதற்கோ போதுமான பணம் மிச்சப்படும்.

ஒரு வருட காலம் ஆயுத உற்பத்தியை நிறுத்தினால் மிச்சப்படும் பணத்தைக் கொண்டு 50 கோடி ஹெக்டேர் நிலத்திற்குப் பாசன வசதி அளிக்க முடியும்.

—ஞான தங்க பாரதி

(ஆதாரம்: சோவியத் சிறப்புக் கட்டுரைகள்




வேண்டும். பணமாகக் கொடுத்தால் பிரச்னைகள், சட்ட திட்டங்கள் எல்லாம் தோன்றும். அதனால் தினசரி தேவையான பொருட்களை அன்றன்று குழுவினர் வழங்கி வர வேண்டும்.

நிர்வாகத்தைப் பொறுத்தவரை, வக்ஃப் போர்டு, சிரோமணி குருத்வாரா பிரபந்தக் கமிட்டி மாதிரி, தனிப்பட்ட 'அடானமஸ்' அமைப்பு ஏற்படுத்தி அவர்கள் வசம் ஒப்படைக்க வேண்டும்.

**உலகத் தமிழ் மாநாட்டுக்கு உற்சவமூர்த்திகளை, விக்கிரகங்களைக் கொண்டுபோனார்களாமே?**

விக்கிரகங்கள் மட்டுமா? வாகனங்கள் கூடக் கொண்டுபோனார்கள். அவை பூஜைக்கு மட்டுமே வைத்து ஆராதிக்கப்பட வேண்டியவை. கண்காட்சிப் பொருளாகக் கொண்டு போய் வைக்கவா அவை இருக்கின்றன? ஆகம விதிகளின்படி ஆண்டாண்டு காலமாகப் பூஜைகள் பல செய்து, அவற்றைத் தெய்வாம்சம் பொருந்தியவையாகக் கருதி வருகிறோம். காட்சிப் பொருளாக வைக்க வேண்டுமானால் புதிதாகச் செய்து கொண்டு போய் வைக்கலாமே?

**தற்போது ஆதிகேசவப் பெருமாள் கோயில் குளத்தில் பலமாடிக் கட்டடம் கட்டும் முயற்சிக்கு எதிர்ப்பு பற்றி?**

பொதுமக்கள் ஆதரவு நிறைய கிடைத்திருக்கிறது. இரண்டு தீர்மானங்கள் வேறு போட்டிருக்கிறோம்.

இந்துக்களுக்குக் கோயிலோடு சேர்ந்த குளங்களும் புனிதமானவை. கோயில்—குளம் என்று சேர்த்துத்தான் சொல்கிறோம் இல்லையா? குளம் சுத்தமாயில்லையென்கிறார்கள். சுத்தமாய் வைத்துக் கொள்ள நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும். பூங்காவோ அல்லது அடுக்கு மாடிக் கட்டடமோ வந்துவிட்டால் சுற்றுப்புறம் சுத்தமாகிவிடுமா? குளத்தில் நீர் நிறையச் செய்ய வேண்டும். ஊருக்கு நடுவே நீர்நிலை இருப்பதுஅழகூட்டும். ஆரோக்கியத்திற்கும் உதவும்.

1953ல் தொண்ணூறு வருட லீஸுக்குச் சென்னை மாநகராட்சிக்குக் கொடுத்து அதைப் பராமரிக்கக் கேட்டுக் கொண்டது கோயில் நிர்வாகம். எங்களுக்குக் கிடைத்த தகவல்படி, மூன்று நான்கு முறை கார்ப்பரேஷன் ரிப்பேர் செய்திருக்கிறார்கள். அதற்குப் பிறகு அவர்களும் ஒன்றும் செய்யவில்லை. கோயில் நிர்வாகத்தினர் பலதடவை நினைவூட்டியும், எங்களிடம் நிதி வசதி இல்லை என்று கைவிரித்துவிட்டதாம்கார்ப்பரேஷன்.

ஆகையால் சென்னை மாநகராட்சி சட்டப்படி தாங்கள் செய்ய வேண்டிய கடமையைச் செய்யவில்லை. அந்த இடத்தைத் தூய்மையாக, சுத்தமாக வைத்திருக்க உதவவில்லை. எல்லாக் கோயில்களையும் பராமரிக்கும் உரிமையுள்ள இந்து அறநிலையத் துறையும் இதுவரை எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. இது சம்பந்தமாக அறநிலையத் துறை ஏதேனும் செய்யும் என்று எதிர்பார்த்தோம். ஒன்றும் செய்யாதபோதுதான் விழித்துக்கொண்டோம். தற்போது மயிலை குருஜி சுந்தரராமசுவாமிகள் தலைமையில் ஒரு குழு அமைத்திருக்கிறோம்.

**ஸ்ரீ**ரங்கம்கோயிலுக்கு இரண்டு ஏர்கண்டிஷண்ட் கார்கள் இருப்பதை திரு ஸ்ரீகுமார் ஆதரிக்கவில்லை. ''இதை உபயோகிப்பது யார்? உபயோகித்தாலும் பத்துத் தடவை போனால் ஒரு தடவை உபயோகித்ததாக மட்டுமே கணக்குக் காட்டி விடுவார்கள். கோயில்களுக்கு எதற்கு குளுகுளு கார்? அநாவசியம்'' என்கிறார் அழுத்தம் திருத்தமாக.

பேட்டி: சாருகேசி

# இந்துமதி

எழுதும்

# நெருப்பு மலர்

நவீனத் தொடர்கதை



# கல்கி

ஆகஸ்ட் 5

ஆண்டு மலரில்

ஆரம்பம்

★ ரூ1000 முதல் பரிசு சிறுகதை

★ தராசு பதில்கள் (கேள்விக்கணைகள் தொடுக்கலாம்!)

★ வாழ்க்கை வளம் பெற...
நிரந்தரப் பயன்தரும் **இலவச இணைப்பு**

★ யோகாசன மகிமை –
ஆரோக்கியம் பேணப் பயிற்சிகள்

— மற்றும் பல புதிய அம்சங்கள் —


ஃபரூக்
பண்ருட்டி
பழுதைன்னு நெனைச்சேன்.. ...பாம்பா இருக்கே!
உங்க மகுடிக்கு அடங்காது போலிருக்கே!


நமக்குள்ளே ஒத்துமை இருக்கு, ஒத்துமை!
எஸ்.டி.எஸ்
பரஸ்பர குற்றச்சாட்டு-கள்
பரஸ்பர குற்றச் சாட்டுகள்


பஞ்சாப் பற்றி வெள்ளை அறிக்கை
அகாலி



கல்கி

1984 ஜூலை 22
மலர் : 42 இதழ் : 51
ரக்தாக்ஷி ஆடி 7



# கலைஞர் செய்தது சரியா?

'மூகத்தின் மீது கோபித்துக்கொண்டு மூக்கை அறுத்துக்கொண்டானும்' என்பதாக ஆங்கிலப் பழமொழி உண்டு. அப்படி இருக்கிறது கலைஞர் செய்த காரியம். எம். ஜி. ஆர். மீது கோபித்துக்கொண்டு அவர் நீதித் துறையையும் நீதிபதியையும் அவமதித்து இருக்கிறார். நீதிமன்றத்தை அவமதிப்பது தமது நோக்கமில்லை என்று அவர் கூறியபோதிலும் பிரத்யட்ச நிலைமை இதற்கு நேர் மாறானதே.

நீதிக்கு முன்டாக அனைவரும் சமம் என்பது ஜனநாயகத்தின் பால பாடம். அப்படி இருக்க, கலைஞர், தாம்மட்டும் நீதிமன்ற ஆணையை மதிக்க முடியாது; சம்மன்ஸை ஏற்க முடியாது; வேணுமானால் கைதுபண்ணி அழைத்துப் போங்கள் என்கிறார். சாதாரண குடிமகன் இப்படி நடந்துகொள்ள முடியுமா? நடந்து கொண்டால் சட்டம் சும்மா இருக்குமா? நீதிபதிகளுக்கும் நீதிமன்றங்களுக்கும் ஒத்துழைப்புத் தந்து தலைவர்கள் முன்மாதிரியாக நடந்துகொண்டு மக்களுக்கு வழிகாட்டவேண்டுமேயன்றி, நீதிபதிகளுக்கு ஒரு தர்மசங்கடமான நிலையைத் தோற்றுவிப்பதா? கலைஞரைப் பின்பற்றி எல்லோருமே இப்படி நடந்துகொள்வது என்று ஆரம்பித்தால் நாட்டில் குழப்பமே மிஞ்சும். ஜனநாயகம் சீர்குலையும். சத்தியாக்கிரஹத்தின் தந்தையான காந்திஜிகூட அந்நிய ஆட்சியையும் அதன் சட்டங்களையும் எதிர்த்தாரேயன்றி நீதிமன்றங்களையும் நீதிபதிகளையும் மதித்தார்.

''எதிர்க் கட்சிகளின்மீது வேண்டுமென்றே வழக்குகள் தொடுத்து அரசு இம்சிக்கிறது; அதனால் சம்மன்ஸை ஏற்க மறுக்கிறேன்; வேணுமானால் என்னைக் கைது செய்து அழைத்துப் போகட்டும்'' என்று பிடிவாதமாக இருந்த கலைஞர் அந்த நோக்கத்தில் வெற்றி பெற்றுவி விட்டது. அதன் மூலம் தமது ஆட்சேபணையை அழுத்தமாக வலியுறுத்தியாகி விட்டது. அதன் பிறகாவது நீதி மன்றத்துக்கு ஒத்துழைப்புத் தரலாம் அல்லவா? 'வழக்கு ஒத்திவைக்கப்பட்டு வேறு தேதிக்கு சம்மன்ஸ் அனுப்பினால் அதையும் வாங்க மாட்டேன்; வேண்டுமானால் மறுபடி கைதுசெய்யுங்கள்' என்கிறார். இது அவர் பெருமையை உயர்த்தவில்லை.

''உங்கள் மீது குற்றம் ருசுவானால்தான் நீங்கள் குற்றவாளி; இப்போது நீதி நிலைக்க உங்கள் உதவி கோரப்படுகிறது, அவ்வளவே; சம்மன்ஸ் அனுப்புவது அதற்காகவே'' என்று நீதிபதி விவரித்துக் கூறியும் எல்லாம் தெரிந்த கலைஞர் புரிந்து கொள்ளாததுபோல் நடந்து கொள்கிறார்.

பால் கமிஷன் அறிக்கை அம்பலமானதில் கலைஞருக்குப் பங்குண்டா? அவர் தூண்டுதல் இருந்திருக்கிறதா? என்பது ஒருபுறம் இருக்க, பால் கமிஷன் அறிக்கை அம்பலப்படுத்தப்பட்டது தவறு என்ற அடிப்படை ஜனநாயகப் பிரச்னையே வழக்கில் உள்ளடங்கி யிருக்கிறது. சட்டசபையில் பால் கமிஷன் அறிக்கை சமர்ப்பிக்கப்படாமல் அனாவசிய காலதாமதங்கள் ஆனதும், ஜனநாயகத்தில் மிக முக்கிய ராணுவ ரகசியங்கள் தவிர வேறு எதையும் மக்களிடமிருந்து மறைக்க ஆட்சியில் இருப்போருக்கு அருகதைஇல்லை என்பதும் வலியுறுத்தப்படல்வேண்டும்.

அகில இந்திய முக்கியத்துவம் வாய்ந்த ஒரு ஜனநாயகப் பிரச்னையைக் குறுகிய கண்ணோட்டமுடைய குடுமிப்பிடி சண்டையாக்கிவிட்டார் கலைஞர்.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

விவாத மேஜை

# குழந்தைகள் வேண்டுமா வேண்டாமா?



"இதைப் பார் அஞ்சலி" என்றார் ராஜகோபாலன். "இதில் குடும்பக் கட்டுப்பாட்டைப் பற்றி ஒரு புரட்சிகரமான கருத்து சொல்லப்பட்டிருக்கிறது. இந்தப் பத்திரிகையில் அதைப் பற்றி ஒரு தலையங்கமே எழுதியிருக்கிறார்கள்"

அஞ்சலி தர்மசங்கடத்துடன் சுற்றுமுற்றும் பார்த்தாள். "உஷ்" என்றாள் எச்சரிக்கையாக. "குழந்தைகள் எந்த நிமிஷமும் இங்கே வரலாம்"

"வரட்டுமே" என்றார் ராஜகோபாலன். "ஜனத் தொகைப் பிரச்னை எல்லோரும் அறிந்ததுதான். இந்த மகளிர் பத்திரிகை என்ன சொல்கிறது தெரியுமா?"

"நீங்கள் எப்படிப் பெண்கள் பத்திரிகையைப் படிக்கலாம்?" என்று கேலி செய்தாள் அஞ்சலி. "அவை ஒன்றுக்கும் உதவாதவை குழந்தைத்தனமானவை என்பீர்களே"

"விஷயத்தை விட்டு நழுவாதே கேள்" என்றார் ராஜகோபாலன். "இதில் என்ன சொல்லியிருக்கிறது என்றால் – யாரால் வைத்துக் காப்பாற்ற முடியுமோ, அவர்கள் நிறையக் குழந்தைகளைப் பெற்றுக் கொள்ள வேண்டும். படித்தவர்கள், வசதி உள்ளவர்கள், அறிவாளிகள் இவர்கள்தான் நாட்டுக்குத் தேவை. என்ன செய்வது இப்படிப்பட்ட குடும்பங்களில்தான் ஒன்று இரண்டு குழந்தைகளோடு நிறுத்திக் கொண்டு விடுகிறார்கள்."

"நாம் எந்தக் கட்சியில் சேர்த்தி" என்று கேட்டாள் அஞ்சலி. "நமக்கு இரண்டே குழந்தைகள். அதனால் நாம் சமூகத்தின் மிக முக்கியமான பகுதியைச் சேர்ந்தவர்களாகி விடுகிறோமா?"

"குறுக்கே குறுக்கே பேசாதே" என்றார் ராஜகோபாலன். "திறமைசாலிகள், வெள்ளைக் காலர் ஜோலிக்காரர்கள் எல்லோரும் குறைந்த அளவில் குழந்தை பெற்றுக்கொள்கிறார்கள். ஏழைகள், வீடு வாசலில்லாதவர்கள், வேலை வெட்டி இல்லாதவர்கள்—இவர்களுக்கு நிறையக் குழந்தைகள் பிறக்கின்றன. இந்தப் பத்திரிகை ஆசிரியர் சொல்லுகிறார். இது நாட்டிற்கு மிகவும் கெடுதலாம். மக்களின் தரத்தில் சரிவு ஏற்பட்டு, ஏற்கனவே நம் நாட்டின் பெருமை சீர்குலைந்து விட்டதாம்."

"சுத்த அபத்தம்" என்றாள் அஞ்சலி கோபத்துடன். "இதற்கு நிச்சயம் ஒரு வழி இருக்கிறது. ஏழைகளையும் குறைந்த அளவில் பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்வது தான் அது. எல்லாரும் டஜன் கணக்காய்க் குழந்தைகள் பெற்றுக் கொண்டால் கூடிய சீக்கிரமே உணவுப் பஞ்சம் வந்துவிடும்."

"ஆனால் ஏழைகள் அந்தக் கோணத்தில் பார்ப்பதில்லை அஞ்சலி" என்றார் ராஜகோபாலன். "கூடுதலாக இன்னொரு வயிற்றுக்கு உணவளிக்க வேண்டும் என்று அவர்கள் நினைப்பதில்லை. வயதான காலத்தில் அவர்களை வைத்துக் காப்பாற்ற, அவர்கள் சேமித்து வைக்கும் மூலதனமே பிள்ளைகள் என்றல்லவா நினைக்கிறார்கள்"

அஞ்சலி சற்று யோசித்துவிட்டு "பிறகு என்னதான் வழி?" என்று கேட்டாள்.

மாலினி சேஷாத்ரி





'எல்லா ஏழை நாடுகளுக்கும் இருக்கிற பிரச்னைதானே இது?''

''வழிதான் இந்தப் பத்திரிகையில் கூறியிருக்கிறதே'' என்றார் ராஜகோபாலன், குறும்புத்தனமாக. ''இந்தப் பிரமாதமான யோசனையை நாமும் பின்பற்றலாம். இன்னும் நாலைந்து குழந்தைகள் பெற்றுக்கொள்ளலாம்''

''சீ இது என்ன வேடிக்கையாக இருக்கிறதா உங்களுக்கு?'' என்று கோபத்துடன் இரைந்துவிட்டு, வெளிநடப்புச் செய்கிற மாதிரி எழுந்துகொண்டாள் அஞ்சலி.

''சும்மா தமாஷுக்குத்தான் சொன்னேன் உட்கார்'' என்றார் ராஜகோபாலன். ''ஆனால் பெருகி வரும் இந்த ஜனத்தொகைப் பிரச்னை அந்தந்த நாட்டுடன் நில்லாது பிற நாடுகளையும் பாதிக்கிறது. பணக்கார நாடுகளில் இருப்பவர்கள் ஏழைநாடுகளில் ஜனத்தொகை அதிவேகமாக வளர்ந்து வருகிறது என்று குற்றம் சாட்டுகிறார்கள். ஏழை நாடுகளுக்கு உதவ வேண்டிய தார்மீகப் பொறுப்பு அவர்களுக்கு ஏற்பட்டுப் போகிறது. அந்தச்சுமை அதிகரிப்பதால் அவர்களுக்குக் கோபம் வருகிறது. இதனால் உலகத்தில் எல்லோருமே— பணக்கார நாடுகள் உள்பட — கஷ்டப்பட நேரும் என்கிறார்கள். போதுமான உணவு, நீர், இடம், வேலை, மின்சாரம் — ஒன்றுமே கிடைக்காதாம். நிபுணர்கள் இது பற்றி ரொம்பக் கவலைப்படுகிறார்கள்.''

''ஆமாம்'' என்றாள் அஞ்சலி. ''சிலர் உலகைப் பற்றிக் கவலைப்படுகிறார்கள். சிலர் தங்கள் நாட்டைப் பற்றி. சிலர் தங்கள் ஜாதியைப் பற்றி. இன்னும் சிலர் தங்கள் மதத்தைப் பற்றிக் கவலைப்படுகிறார்கள். நேற்று பத்திரிகையில், ஒரு மதச்சார்புள்ள ஸ்தாபனத்தின் யோசனையைப் படித்தேன். அந்தக் குறிப்பிட்ட மதத்தைச் சேர்ந்த தாய்மார்கள் பத்துக் குழந்தைகளைப் பெற்றால் அவர்களுக்குப் பரிசு உண்டாம். இப்படி ஊக்குவிக்கவில்லை என்றால், அவர்கள் மதம் சிறியதாகிப்போய், மற்ற மதத்தினர் எண்ணிக்கையைக்காட்டிலும் குறைந்துபோய் ஒரேயடியாக அவர்கள் மதமே மறைந்து போய்விடுமாம். அதனால் உடனடியாக அவர்கள் ஜனத் தொகையை அதிகரிக்க-வேண்டுமாம்.''

''என்ன வேடிக்கை'' என்றார் ராஜகோபாலன். ''ஒரு பக்கம் அரசாங்கம் சிறிய குடும்பமே போதும் என்று கெஞ்சுகிறது. இதற்காகப் பணமும் பரிசும் கொடுக்கிறது. இன்னொரு பக்கம் பெரிய குடும்பம் வைத்திருப்போருக்குப் பரிசு கொடுக்கிறேன் என்கிறார்கள்.''

''உலகம் முழுவதுமே அப்படித்தானே?''



என்றாள் அஞ்சலி. ''சீனாவில் ஒன்றிரண்டு குழந்தைகளுக்கு மேல் இருந்தால் தண்டனை கொடுக்கிறார்கள். அதற்கு அடுத்துள்ள ருஷ்யாவில், அதிகக் குழந்தைகள் பெறும் அம்மாமார்களுக்கு வெகுமதிகள் கொடுக்கிறார்கள்''

ரஞ்சிதாவும் விவேக்கும் இவர்கள் பேசிக்கொண்டிருக்கையில் சத்தம் போடாமல் அறைக்குள் நுழைந்திருந்தார்கள். விவேக் திடீரென்று பேச ஆரம்பித்ததும், அஞ்சலிக்கும் ராஜகோபாலனுக்கும் தூக்கிவாரிப் போட்டது.

''நான்கூட ஒரு சயன்ஸ் பத்திரிகையில் படித்தேன் ஜனத் தொகை பிரச்னை பற்றி'' என்றான் விவேக். ''டென்மார்க், ஸ்வீடன் போன்ற நாடுகளில் ஜனத் தொகை அதிகரிப்பு விகிதம் பூஜ்யத்துக்கும் குறைவாக இருக்கிறது இல்லையா? இங்கேயெல்லாம் இன்னும் ஐம்பது வருஷங்களில் இளையவர்களை விட இரண்டு மடங்கு முதியவர்களே இருப்பார்களாம். அந்தக் காலகட்டத்தில், அந்த நாடுகளில் வளர்ச்சி தடைபட்டுக் குன்றிவிடும். அப்புறம் அவர்கள் ஏழை நாடுகள் வரிசையில் சேர்ந்து விடுவார்கள். ஏழைகளானதும் அவர்கள் ஜனத் தொகை அதிகரிக்கத் தொடங்கும். அப்படியாக இந்தச் சக்கரம் மறுபடி சுழலத் தொடங்கும்.''

''எப்படியானாலும், நான் புகழ் பெற்ற சமூக விஞ்ஞானி ஒருவரின் புத்திமதிப்படி தான் நடக்கப் போகிறேன்'' என்றாள் ரஞ்சிதா. ''நான் குழந்தைகளே பெற்றுக் கொள்ளப் போவதில்லை. இரண்டோ மூன்றோ ஏழைக் குழந்தைகளைத் தத்து எடுத்துக் கொள்ளப் போகிறேன்''

அஞ்சலி கணவரைப் பார்த்தாள். 'பாருங்கள், இதற்குத்தான் குழந்தைகள் எதிரே இந்த விவாதம் வேண்டாம் என்றேன்.' என்கிற மாதிரி. ராஜகோபாலன் தர்மசங்கடத்துடன் நெளிந்தார்.

அதற்குள் விவேக் நிலைமையைச் சமாளிக்கிற மாதிரி பேசினான். ''அவசரப்பட்டு ஒரு முடிவுக்கு வராதே ரஞ்சிதா. நான் பெரியவனானதும் புது மாதிரி பரிசும் விருதும் அறிவிக்கப் போகிறேன். இரண்டு குழந்தைகளைப் பெற்றுக் கொண்ட பிறகு நாலு ஏழைக் குழந்தைகளைத் தத்து எடுத்துக் கொண்டு வளர்க்கிறவர்களுக்கு வீரப் பெற்றோர் பட்டம்.''

---

மின்மினிப் பூச்சியைப் போலவே கடல் நீரில் ஒளி விட்டுக் கொண்டிருக்கும் 'பிளாஷ் பிஷ்' என்ற ஒருவித அபூர்வ மீனை ஜப்பானியர் கண்டு பிடித்துள்ளனர். அந்த மீனை ஒரு கண்ணாடித் தொட்டியில் கடல் நீருடன் விட்டு, அதை இரவு நேர ''நைட் லாம்ப்''ஆகப் பயன்படுத்தி வருகின்றனர்.

தகவல்: ஜா. ரவி ஆதாரம்: ஒஸாகா நியூஸ்



## எதிர்காலம் உங்கள் கையில்

# ஸ்காலர்ஷிப் கிடைக்க... ஏ.எம்.ஐ.ஈ. படிக்க...

மிஸ் சாந்தியின் ஸ்காலர்ஷிப் பற்றிய கேள்விக்கான பதில்:

முதலில் காலேஜில் ஸீட் வாங்கியாச்சா? அப்புறம் கேளுங்கள் ஸ்காலர்ஷிப் பற்றி. பொதுவாக கல்லூரிகளில் 'காலண்டர்' என்று ஒன்று தருவார்களே (அதில்கூட என்னென்னிக்கு லீவு என்று போட்டிருக்குமே, அதே தான்!) அதை சினிமா பத்திரிகை படிப்பீங்களே— அதே போல ஒரு வரி விடாமல் படிங்க. அதுல டீடெய்லாப் போட்டிருக்கும். காலேஜ்களில் 'ஸ்காலர்ஷிப்'புக்கென்று தனியாய் ஒருவர் இருப்பார். அவரைப் பிடித்து விசாரியுங்கள். இதெல்லாம் ஒருபுறம் இருக்கட்டும். பொதுவாக ஒருசில ஸ்காலர்ஷிப்புகள் பற்றிச் சில விவரங்கள் சேகரித்துக் கீழே தரப் பட்டுள்ளன.

- தாழ்த்தப்பட்ட, மலைஜாதி மாணவர்களுக்கான ஸ்காலர்ஷிப்
- ஆசிரியர்களின் பிள்ளைகளுக்கான தேசிய ஸ்காலர்ஷிப்.



(மேற் சொன்னவைகளுக்கு அந்தந்த மாநிலக் கல்வித் துறை டைரக்டருக்கு எழுத வேண்டும்.)

- என். ஸி. ஈ. ஆர். டி. ஸ்காலர்ஷிப்கள் (இது தேர்வு எழுதிப் பெறுவது)
- புத்திசாலியான ஏழை மாணவர்களுக்கான ஸ்காலர்ஷிப்.
- ஆண்டு வருமானம் 6000க்கு குறைந்த குடும்பமெனில் தேசிய கடன் ஸ்காலர்ஷிப்.
- ஆசிரியர்களின் குழந்தைகளுக்கான மாநில அரசு ஸ்காலர்ஷிப்புகள் (டைரக்டர் ஆஃப் ஸ்கூல் எஜுகேஷன், சென்னை-6)

இது போல இன்னும் நிறைய. கல்லூரிகளில் கேட்டு மேலும் விவரம் பெறவும்.

• • •



நடுக்கடலில் மிதக்கும் கப்பலுக்குக் கரையுடன் ஒரே தொடர்பு ரேடியோ மூலம்தான். அதுவும் புயல் வீசும்போது ஒயர்லெஸ் ஆப்ரேட்டர்களின் முக்கியத்துவம் பெரிதும் உணரப்படுகிறது.

ஏ. எம். ஐ. ஈ. படிப்பு பற்றி எழுதினால் சுமார் இரண்டரை டஜன் பேரின் சந்தேகங்களுக்குப் பதில் சொன்ன திருப்தி ஏற்படும். இரண்டரை டஜன் பேர்களின் லிஸ்ட் இங்கே அநாவசியம் என்று தோன்றுகிறது. நேரே விஷயத்துக்குப் போகலாம்.

இப்போது ஒரு திடீர் திருப்பம். மிக அதிகமான பேர் சாய்கிற இடம் இந்த ஏ. எம். ஐ. ஈ. இந்த நாலெழுத்துக்களை 'அசோஸியேட்டட் மெம்பர் ஆஃப் இன்ஸ்டிடியூட் ஆஃப் இன்ஜினீயர்ஸ்' என்று இழுத்தும் படிக்கலாம். இது இன்ஜினியரிங் படிப்புக்கு இணையாக விளம்பரப் படுத்தப் படுகிறது; மதிக்கப் படுகிறது.

இதில் மூன்று பிரிவுகள் உண்டு. முதலாவது 'ஸ்டூடண்ட் ஷிப்'. இதில் 10வது முடித்தவர்கள் சேரலாம். ஒரு வருடப் படிப்பு. வருட முடிவில் 5 பேப்பர்களில் (கணிதம், பிஸிக்ஸ், கெமிஸ்ட்ரி மற்றும்

ஆங்கிலம் 2 பேப்பர்) பரீட்சை எழுத வேண்டும். அடுத்து இவர்கள் செக்‌ஷன் —ஏ' படிக்க வேண்டும். பிளஸ் 2 முடித்தவர்கள் முதல் குரூப்பில் படித்திருந்தால் நேரே 'செக்‌ஷன் ஏ'வில் சேரலாம். இதில் மொத்தம் 9 பேப்பர்கள் எழுத வேண்டும். இதை முடித்ததும் 'செக்‌ஷன்—பி' படிக்க வேண்டும். இதில் 8 பேப்பர்கள் எழுதவேண்டும். 'செக்‌ஷன்—ஏ', 'செக்‌ஷன்—பி' இரண்டும் ஒன்றரை பிளஸ் ஒன்றரை வருடங்கள்.

இந்தப் படிப்புக்கான பரீட்சைகள் கல்கத்தாவில் உள்ள இன்ஜினியர்களின் இன்ஸ்டிடியூட்டால் ஆண்டுக்கு இருமுறை நடத்தப்படுகிறது. இதற்கான பயிற்சிதான் பல் வேறு நிறுவனங்களாலும் தரப்படுகிறது. எங்கே பயிற்சி பெற்றாலும் ஸ்டூடண்ட்ஷிப்பில் சேர்ந்ததும் இந்த இன்ஸ்டிடியூட்டில் உறுப்பினராய்ப் பதிவு செய்து கொள்ள வேண்டியது முதல் காரியம். 'செக்‌ஷன்—ஏ' சேர்ந்தாலும் [illegible]. 'ஸ்டூடண்ட்ஷிப்' படிக்காதிருக்க 'எக்ஸெம்ஷன்' பெற்றுக் கொள்ள வேண்டும்.

படிப்பு ரொம்பக் கஷ்டமா? இது அடுத்த கேள்வி. இதற்கு 'அவ்வளவு ஒன்றும் கஷ்டமில்லே' என்று நான் சொன்னால் அது முழுப் பொய் என்று இப்போது ஏ. எம். ஐ. ஈ. படிப்பவர்கள் அடிக்க வந்து விடுவார்கள். ஒரே சமயம் எட்டு, ஒன்பது பரீட்சைகள் எழுதுவது சுலபமா என்ன? படிக்க ஆரம்பித்து, படித்துக் கொண்டே ஏஏஏ இருப்பவர்கள் ஏராளம். ஏ. எம். ஐ. ஈ.யை Appeared Many times In Exams என்று தமாஷாகச் சொல்வதுண்டு.

ஒரே சமயத்தில் அத்தனை பரீட்சையிலும் தேறுகிறவர்கள் சுமார் 20 சதவிகிதம்தான் என்று புள்ளி விவரம் தருகிறார் மாணவர் சோமசுந்தரம். (இவர் ஒரே அட்டெம்ப்ட்டில் 'செக்‌ஷன்—ஏ'வில் ஒன்பது பரீட்சைகளிலும் தேறினவர்களில் ஒருவர்) இவர் தருகிற டிப்ஸ்: பரீட்சையில் தேற ஒரே வழி ஸின்ஸியரான – கடுமையான–உழைப்பு, உழைப்பு உழைப்புத்தான்.

சரி நாட்டில் எத்தனையோ கல்லூரிகள் இந்தப் பயிற்சியை அளிக்கின்றனவே எது நல்லது என்று எப்படித் தெரிந்து கொள்வது? இது பலரது சந்தேகம். அந்தந்தக் கல்லூரிகளின் ரிஸல்ட்டைப் பார்க்கலாம். அங்கே படித்தவர்களை விசாரிக்கலாம்.

• • •

'கல்கி ஆசிரியர் அவர்களுக்குக் கீழ்ப் படிந்துள்ள மாணவ வாசகன்' பி. என். பாளையம் பி. சண்முகசுந்தரத்துக்கு... நீங்கள் கோரும் விவரம் கப்பலில் பணியாற்றும் ரேடியோ ஆபீஸர் பயிற்சி பற்றியதுதானே!

விவரங்கள் இதோ:

மரைன் ரேடியோ ஆபீஸர் வேலை கிடைக்க, மத்திய அரசின் கம்யூனிகேஷன் துறை நடத்துகிற பரீட்சையில் பாஸ் செய்ய வேண்டும். இதற்கான பயிற்சி தரும் நிலையங்களுள் ஒன்று சென்னை அடையாறில் உள்ளது. (நெ. 48, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு, சென்னை 20) இது 12 மாதப் பயிற்சி. ஆனால் பயிற்சி பற்றி ஒரு வார்த்தை: கஷ்டம். சொல்லப் போனால் படு கஷ்டம். கஷ்டப்பட்டு, படித்து முடித்தாலோ, வணிகக் கப்பல்களிலும், கப்பற் படையிலும் நல்ல வாய்ப்பு. 2000 ரூபாய் வரை சம்பாதிக்கலாம். (எடிட்டர் சார், எனக்குச் கூட இருக்கிற வேலையெல்லாம் விட்டு விட்டு இந்தக் கோர்ஸ் படிக்கப் போயிடலாம் என்று தோன்றுகிறது) எஸ். எஸ். எல். ஸி. இதில் சேரக் குறைந்த பட்சக் கல்வித் தகுதி. பட்டதாரிகளுக்கு முன்னுரிமை தரப்படும். கோர்ஸ் கட்டணம் சுமார் ரூபாய் 2000 ரூபாய். (அதாவது வாங்கப் போகும் முதல் மாச சம்பளம்.) என்ன ச. சுந்தரம், இந்தத் தகவல் போதுமா. இன்னும் கொஞ்சம் வேணுமா? வேணுமானால் ரமணா இன்ஸ்டிடியூட் ஆஃப் மரைன் இஞ்சினியரிங் (முகவரி மேலே)க்கு 6 ரூபாய் எம். ஓ. பண்ணித் தெரிந்து கொள்ளுங்கள்.

—எஸ். சந்திரமௌலி

# அனந்தனின் ஆறு அம்சங்கள்!

ஜனதா கட்சியிலிருந்து விலகி மீண்டும் கா. கா. தே. காவை ஆரம்பித்ததிலிருந்து, மக்களும், பத்திரிகைகளும் குமரி அனந்தனை சீரியஸாக எடுத்துக் கொள்வதில்லை. சமீபத்தில் கா. கா. தே. கா. நடத்திய ஆறு அம்சப் போராட்டமும் அதிகமாகக் கவனத்தைக் கவரவில்லை. எனினும் ஆறு அம்சங்களில் ஐந்து அர்த்தமுள்ள கோரிக்கைகள் என்பதால் அவை பற்றிய குமரி அனந்தனின் விளக்கங்களை வாசகர்களுக்கு அளிக்கிறோம்:

1. ''தமிழ்நாட்டில் 10 லட்சம் பம்பு செட்டுகள் உள்ளன. ஆண்டுதோறும் 35 கோடி ரூபாய் விவசாயிகளிடம் மின்கட்டணமாக வசூலிக்கப்படுகிறது. நமது விவசாயிக்கு மின்சாரத்தை இலவசமாகக் கொடுத்தால் உற்பத்தியை நிச்சயம் அதிகரிப்பான். மேலும்நெய்வேலியில் உற்பத்தியாகும் மின்சாரத்துக்கு மத்திய அரசுக்குக் கட்டணம் செலுத்திப் பெறுகிறோம். ஆனால் மத்திய அரசு தமிழகத்தில் தோண்டி எடுத்துப் பயன்படுத்தும் நிலக்கரிக்குக் கட்டணம் செலுத்துவதில்லை. இதைப் பெற்றாலே போதும் விவசாயிக்கு வழங்கும் சலுகையை விட அதிகமாக இருக்கும்.

2. கல்வி நிலையங்களில் மாணவர்க்கு வழிகாட்டுதல் குழு ஒன்று அமைக்க வேண்டும். 'இறுதி ஆண்டு படிக்கும் மாணவன் அடுத்து செய்ய வேண்டியது என்ன' என்று ஆலோசனை கூறுவதற்குக் கல்வி நிலையங்களில் பரந்த அனுபவ அறிவும் பொது நல நோக்கும் கொண்டோர், ஆசிரியர்கள், தொழிற்துறையைச் சார்ந்தோர் ஆகியோர் அடங்கிய குழு அமைக்கப்பட்டு, ஒவ்வொரு மாணவனையும் அக்குழு சந்தித்து அவனது விருப்பத்தை அறிந்து சரியான ஆலோசனை தர வேண்டும்.

3. மணியாச்சி ரயில் நிலையத்திற்கு வாஞ்சி மணியாச்சி என்று பெயர் வைக்க வேண்டுமென்று 1981–ம் ஆண்டிலிருந்தே போராடி வருகிறோம்.

4. மதி கெடுக்கும் மதுவின் தீமைகளை விளக்கிச் சொல்ல வேண்டியதில்லை. மதுக் கடைகளைப் படிப்படியாக மூடிவிட வேண்டும்.

கர்ப்பமான பெண்களுக்குத் தனியாக பெர்மிட் கொடுக்கிறது அர்ஜென்டைனா அரசு. இதை வைத்துக்கொண்டால் அவர்கள் எந்த க்யூ வரிசையிலும் நிற்காமல் உடனுக்குடன் தங்களுக்குத் தேவையானதைப் பெற்றுக் கொள்ள முடியும்.

—ஐ. ரவி



5. செவிப்பறையைக் கிழிக்கும் ஒலி அலறலைத் தடுப்பாம். ஒவ்வொரு மனிதனின் காதும் 90 டெசிபல் சப்தத்தைத் தாங்கும். கார், டஸ் முதலியவற்றில் பொருத்தப்படும் ஏர் ஹாரன், தொழிற்சாலைகள், மோட்டார் சைக்கிள்கள் ஜெட் விமானம் போன்றவை 90 டெசிபல் சப்தத்துக்கு மேல் எழுப்புகின்றன. 90 டெசிபல் சப்தத்திற்கு மேல் தொடர்ந்து கேட்டுக்கொண்டிருந்தால் நமது காது செவிடாக வாய்ப்பிருக்கிறது. சத்தத்தால் ஏற்படும் செவிட்டுத் தன்மையை மருந்துகளாலும், விஞ்ஞானக் கருவிகளாலும் குணப்படுத்த முடியாது. எனவே செவிப்பறை கிழிக்கும் ஒலிசனை உடனே தடை செய்ய வேண்டும். கூட்டங்களில் குழாய் ஒலிபெருக்கிக்குப் பதிலாகப் பெட்டி அமைப்பு கொண்ட ஒலி பெருக்கி மட்டுமே அமைக்க வேண்டும்.''

ஆறு அம்சங்களில் ஐந்து ஓ.கே. அந்த விரும்பத்தகாத ஆறுவது அம்சம் என்ன? இலங்கைத் தமிழரின் உரிமையை நிலை நாட்ட வேண்டியதுதான்; அதற்காக ராணுவத்தை அனுப்ப வேண்டும் என்பது மட்டும் அனர்த்தமே.

—திருபர்.



## அர்த்தமுள்ள ஐந்து அனர்த்தமான ஒன்று

சங்கேத முறையில் ஓலை எழுதுகிறாள். அவள் மட்டும் நானிய வரை நிதானித்து இருந்தால், சிலையைக் கடத்தி வர வேண்டும் என்று பாண்டிய அரண்மனையில் தீர்மானித்த செய்தியையும் குறிப்பிட்டிருப்பாள். கதை வேறு விதமாகவும் திரும்பி இருக்கலாம்.

அந்த விஷயமும் ஒரு சோதனையேபோல அமைந்து விட்டது. (தொடரும்)

## அத்தியாயம் 13

### ராஜத்துரோகி

வேங்கைகளின் உறுமல் சத்தம்....

அந்த இராப்போதில் கானப்பேர்க்கோட்டைக்கே தனியான மகத்துவத்தைத் தருகிறது. ஒரு மகோன்னத காவல் சத்தம் போல அது எதிரொலிக்கிறது.

வேங்கைவனத்தில்புதியதாக நிர்மாணிக்கப்பட்ட அந்தப் பொற்சிலையைக் கண்ட வேங்கைகள், புரியாத புதிருடன் அதனடியில் செல்வதும், அண்ணாந்து கவனிப்பதும் பிறகு சுற்றிச் சுற்றி வருவதுமாக இருந்தன.

உறுமல் மூலம் எங்கே தியாகவல்லி, என்றும் கேட்கத்தான் செய்கின்றன.

திருமேனிச் சிலையை உற்றுக் கவனித்தவாறு பளிங்கு மாளிகை வாசற்படியில் அமர்ந்து காணப்படுகிறான்,வேங்கைமார்பன்.

குதிரை வரும் குளம்படிச் சத்தம் கேட்கிறது.

எந்த நேரத்தில் நல்ல செய்தி வருமோ என்ற எதிர்பார்ப்பு அவனது துடிப்பில் இருந்து தெரிகிறது.

எழுந்து இரும்பு வேலிப்பக்கமாகச் செல்கிறான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அவன் எதிர்பார்த்தபடி அந்த ஒற்றன் அங்கே வந்து வணங்கி நின்றான்.

வேங்கைகள் உருண்டு புரண்டு ஊடல் நிகழ்த்திக் கொண்டிருக்கின்றன.

இடுப்பில் செருகி எடுத்து வந்த ஓலையை எடுத்து மிகவும் பணிவுடன் நீட்டுகிறான் ஒற்றன். அதனைப் பெற்றுக் கொண்ட வேங்கைமார்பன், ''ஏதேனும் வாய்ச் செய்தி?'' என்றான்.

நடந்த அனைத்துச் செய்திகளில் தியாகவல்லி சொல்லியனுப்பியதை மட்டும் சொல்லுகிறான்.

செய்திகளை அறிய அறிய...

வேங்கைமார்பன் முகத்தில் தான் எத்தனை எத்தனைவிதமான மெய்ப்பாடுகள்! அவற்றில் அவன் ஓரளவு எதிர்பார்த்தது; ஓரளவு எதிர்பாராதது. ஆனால், பேரளவும் எதிர்பாராதது என்பது தனது செயலைப் பாண்டியமாமன்னர் ஆதரித்து நின்றாராமே! வியக்கத்தக்க செய்திதான்.

''மற்றொரு செய்தி மன்னர்பிரானே!''

''என்னது?''

''சேனாதிபதியார் தங்கை, தங்களுக்கு ஓலை மூலம் தெரிவித்து இருக்கிறார்களோ என்னவோ? வாய் மூலமாகச் சொன்னதில்லை. ஆனால் எனக்கென்று ஒரு கடமை இருக்கிறதல்லவா? அது சொல்லத் தூண்டுகிறது.''

''தைரியமாகச் சொல்.''

''நமது சேனாதிபதியார் நமக்குச்சேதாரம் விளைவிக்கவே முயன்று வருகிறார்! ராஜத்துரோகியாக மாறி விட்டார்.''

''இதனை முன்கூட்டியே தியாகவல்லி தெரிவித்து விட்டாள். ஆனாலும் உனது கடமையுணர்வை மெச்சுகிறேன். எனது இந்த முயற்சி முடியட்டும், உனக்குப்பதவி உயர்வு உண்டு. நாளை இரவு நீ என்னைச் சந்திக்கிறாய்.''

''உத்தரவு மன்னர் பெருமானே''

ஒற்றன் தலைபணிந்து விடைபெற்றுச் சென்றான்.

வேங்கைகள் ஒன்றோடொன்று விழுந்து, புரண்டு விளையாடிக் கொண்டிருக்கின்றன. உயர்திணைக்குரிய அற்பங்கள் அவற்றிடமில்லையே. சிரிக்கத் தெரிந்ததால் வந்த வம்பல்லவா நாகரீகம்.

பளிங்கு மாளிகையைப் பார்த்தாற்போல நிறுவப்பட்டிருந்த அந்தப் பொற்சிலையருகே திருமேனியருகே நின்று வழக்கம்போலப் பித்துக் கொண்டவன் போலக் கவனிக்கிறான் வேங்கைமார்பன்.

ஓ... திருமேனி உனது திருமேனியின் நிழல் எப்போது என் மீது விழப்போகிறது? உனது பவித்திர மேனியில் நான் எப்போது பாதியாய்ப் பதிவேன்?

நெட்ட நெடிய பெருமூச்சுடன் அந்த ஓலையைப் படிக்க முயல்கிறான். அருகில் எரிந்து கொண்டிருந்த தீப்பந்தத்தின் வெளிச்சம் போதுமானதாக இருந்தது.

வழக்கம் போல எழுதியனுப்பாமல் இம்முறை தங்களுக்கே தெரிந்த சங்கேத முறையில் எழுதியிருந்தாள் தியாகவல்லி. ஏதோ அதி முக்கியச் செய்தி. எவரிடமாவது அகப்பட்டுக் கொண்டால் தீங்கு நேரிட்டு விடக் கூடாது என்கிற ஆபத்தான செய்தி மட்டுமே இவ்வாறு சங்கேத முறையில் எழுதிக் கொள்வோம் என்று இருவர்

# வேங்கை வனம்

## கோவி. மணிசேகரன்

மட்டுமே கண்டுபிடித்த இரகசிய முறை இது. எவராலுமே படித்தறிய முடியாது.

ஓலையின் தலைப்பில் கவனிக்கிறான்.

*உ, ந, ரு, எ, அ என்றிருந்தது.

அதாவது இரண்டு, மூன்று ஐந்து, ஏழு, எட்டு.

கடைசியில் குறிப்பிடுகிற எண் பகுத்தல் என்பது.

அந்த ஓலை நறுக்கு மாதிரியே இன்னொரு ஓலை நறுக்கைப் பளிங்கு மாளிகையுள்சென்று எடுத்து வருகிறான். கடைசியாக இருந்த பகுத்தல் எண் எட்டினை மனத்தில் கொண்டு அந்த ஓலையின் நீளத்தை எட்டளவாகப் பகுதிநுக் குறிப்பிட்டுக் கொள்கிறான்.

இறுதியாக நீளத்தை எட்டாகப் பகுத்துக் கொண்ட அளவுக்குக் கீழுள்ள வார்த்தை களைக் கவனிக்கிறான்.

அந்த ஓலையில் பொதுவாகத் தமிழ் எழுத்துக்கள் தாறுமாறாகக் கைக்கு வந்தவாறு நீள நீளமாக எழுதியிருந்தாலும், குறிப்பிட்ட எண்பகுப்புக்கு நேர் கீழே உருப்படியான வார்த்தை இருக்கும். ஆனாலும் அதுவும் தாறுமாறாகவே இருக்கும்.

---

* தமிழ் எண் படிவம் 2, 3, 5, 7, 8 இதனைப் பிற்கால வடிவம் என்று கூறுவாருமுண்டு.



முதல் எண் இரண்டு. அதாவது —

எட்டாக அளந்த பகுப்புகளில் இரண்டாம் பகுப்புக்கு நேர்க் கீழுள்ள முதல்வரி வார்த்தை...

ரன வசியை இ

அடுத்து, மூன்றாவது பகுப்புக்கு நேர்கீழ் வார்த்தை...

டஉனே

அடுத்து ஐந்தாவது—

திடக்கடல்

அடுத்து ஏழாவது—

...டும்

எழுத்துக்களைப் புரட்டிப் புரட்டிப் போட்டுச் சரியான வார்த்தைகளைக் கண்டு பிடிப்பதற்குள் முகத்தில் வியர்வைத்துளிகள் அரும்பிய வண்ணமிருக்கின்றன.

காற்றில் அசைந்தாடும் தீப்பந்தத்தின் அக்கினி ஜுவாலையால் முகத்தில் செம்மையும் நிழற்கருமையும் மாறிமாறிப் பரவுகின்றன.

வார்த்தைகள் புரிபடுகின்றன.

இளவரசியை

உடனே

கடத்திடல்

(வேண்)டும்.

புரிபட்ட அடுத்த கணமே புடைப்பட்டு அலைமோதுகிறுக் வரிபட்ட வேங்கையனைய வேங்கைமார்பன்.

திருமேனிச் சிலையை உற்று நோக்குகிறான்.

திருமேனி! உன்னைக் கடத்திவர வேண்டும். உத்தரவு வந்து விட்டது.

அதுவரை தன்னையே அண்ணாந்து நோக்கிக் கவனித்த வேங்கைகளையும் அவன் கவனிக்கவில்லை. இப்போது கவனிக்கிறான். உறுமுகின்றன.

குனிந்து அவற்றை அன்புடன் தட்டி விடுகிறான். இரண்டும் திமிறிக் கொட்டாவி விடுவன போல வாய் திறந்து உறுமுகின்றன.

ஆ! என்ன அழகான உடற்கள் என்று அவன் ரசிக்கிறான்.

அவனுக்கும் வேங்கைகளுக்கும் உணவு வந்தது. முதலில் வேங்கைகளை உண்ணச் செய்து, பிறகு அவன் உண்ணச் செல்கிறான்.

சிறை அதிகாரி: ''இங்கே ஏதாவது அசௌகரியங்கள் இருக்கா?''

கைதி: ''ஆமா ஜன்னல் கம்பிகளெல்லாம் வளைக்க முடியாதபடி ரொம்ப உறுதியா இருக்குது சார்.''

—கோழை. அ. கதிர்வேல்.



வேங்கைகளும் அவனைப் பின்தொடர்ந்து மாளிகையுள் செல்கின்றன.

இரவு கரைந்து, பொழுது விடிந்து, மாலை மலர்ந்து மீண்டும் இரவு மணத்தது.

குறிப்பிட்ட நேரத்தில் ஒற்றன் அங்கே வந்து இரும்புவேலிப் பக்கமாக நின்று வணக்கம் தெரிவிக்கிறான்.

அவனை நெருங்கிச் சென்ற வேங்கைமார்பன், இடுப்பிலிருந்த ஓலை நறுக்கை எடுத்து நீட்டி, ''என்னையே உன்னிடம் ஒப்படைக்கிறேன்; கவனம்'' என்றான்.

அந்த எச்சரிப்பில் எத்தனையோ அர்த்தங்கள்...

ஒற்றன் தலைகுனிந்து ஏற்றுப் புறப்பட்டான். சற்றைச்கெல்லாம் குதிரையின் வேகமான குளம்படிச் சத்தம் கேட்டது.

வேங்கைமார்பன் திருமேனிச் சிலையை நோக்கி உற்றுக் கவனிக்கிறான்.

அவள் அங்கே பொன்னகை புரிந்து கொண்டிருந்தாள்.

எங்களுக்குக் கதவைத் திறந்து விடேன் என்று வேங்கைகள் உறுமுகின்றன.

**பொ**ழுது விடிந்து மதுரையின் அழகு முகவரிகளை சூரியன் அறிமுகம் செய்வதற்குள், சிற்பியார் வீட்டை அடைந்து விட வேண்டும் என்கிற வேகச் சுழிப்புடன் புரவியை விரட்டு விரட்டென்று விரட்டி வருகிறான் அந்த ஒற்றன்.

புரவிக்கே ஆச்சரியம்;

இதுவரை அதனை அவ்வாறு வாயில் விலாழி தள்ள, இடுப்பு நரம்பு அறுந்து போக விரட்டியது கிடையாது. இன்று பார்த்து இந்த ஒற்றனுக்கு என்ன வந்து விட்டது?

கருக்கலின் அதிகாரம் ஆரம்பமாக இன்னும் அரை நாழிகைப் பொழுதே இருந்தது. இதே வேகமாகச் சென்றால், கருக்கல் முடிவதற்குள் சிற்பியின் வீட்டையடைந்து விடலாம். அதன் பிறகு மெல்லத் தியாக வல்லி வீட்டுக்குச் சென்று, காணிகள் இல்லாத சமயமாகப் பார்த்து இந்த ரகசிய ஓலையைச் சேர்த்து விட்டால்...

கடமை இனிதாக முடிந்துவிடும்.

அந்த வனாந்திரப் பகுதி அவனுக்கு அத்துபடியாகி விட்டபடியால், குறுக்கு வழியில் புகுந்து மரங்களடர்ந்த அந்தப் பாதையில் மிகவும் லாகவமாகச் சேணங்களைப் பிடித்துக் குதிரையை விரட்டிக் கொண்டிருந்தான்.

வானில் நிலவு ஒளிநர்த்தனம் புரிந்து கொண்டிருந்தாலும், மரங்களடங்கியடர்ந்த வனாந்திரம் கருங்கும்மென்றே காட்சியளித்தது. ஆங்காங்கே தரையில் எவரோ மகா வள்ளல் வெள்ளித் தட்டுக்களையும் காசுகளையும் இரைத்து விட்டாற்போல நிலவுத் திட்டுக்கள்.

ஒரு கட்டத்தில்...

திடுமென்று எதிரும் புதிருமாக இரு புரவிகள் சீற்றமுடன் பாய்ந்து வந்ததைக் கண்டு அரண்டு போனான் ஒற்றன்.

சீறி வந்த இரு புரவிகளும் அவனைப் பலமாகத் தாக்கின. போதாக் குறைக்கு மற்றும் இரண்டு குதிரைகள் பாய்ந்து வந்தன.

# உலகிற்குக் காட்டுங்கள், உண்மையான வெண்மை என்ன என்பதை









## உன்னதம்...உன்னதம்...
## வெண்மையிலே
## அனைத்திலும் உன்னதம்!

உங்களுக்கு காட்டவும் டெட்டில் உண்டு ஏராளம். இதன் புதிய உறை—கண்ணைக் கவரும். திறந்து பாருங்கள் .ஆச்சரிய மளிக்கும் இதன் புத்தம்புது மணம். இக்கட்டியில் அடங்கி யுள்ளது அதிக வெண்மைக்கான சக்தி.

நீங்கள் பாருங்கள்... காட்டுங்கள் உலகிற்கு
டெட் தரும் வெண்மையை... உண்மையான வெண்மையை.

Shilpi DM 9A/84 Tam.

எப்படியோ, பாவனை காட்டித் தப்பிக்க ஒற்றன் அசுர முயற்சியை மேற்சொள்கிருன்.

அப்போது இன்னும் இருபுரவிகள் வேறு எதிர்ப்பட வேண்டுமா?

அவனது அந்தச் சாகசம் பலிக்காது என்பது போல் அவன் ஆரோகணித்து இருக்க புரவி தளர்வு கண்டது.

ஒற்றன் வாளையுருவிக் கொண்டான். அடுத்து ஆறு வாட்கள் சரக், சரக், சரக், சரக், சரக், சரக்...

வேற்று சந்தர்ப்பமாக இருந்தால் அப்போதே குதிரையை நிறுத்தி 'என்ன ஏது?' என்று விசாரித்துத் தப்பித்து இருப்பான். மடியில் தான் வேங்கையின் கனமாயிற்றே.

எவ்வளவு நேரம் தான் ஒருவன் அறுவரைச் சமாளிக்க முடியும்? என்னதான் வேங்கைவனப் பயிற்சியாக இருந்தாலும்?

ஒரு சந்தர்ப்பத்தில் சேணப்பிடி நழுவி விடவே, கீழே குப்புற விழுந்து விட்டான். ஆறு வாள் முனைகள் அவனது நெஞ்சைப் பதம் பார்க்க நீண்டு விட்டன.

''அசையாதே!''

ஏழாவதாக எங்கிருந்தோ ஒரு குரல் ஒலிக்கிறது.

கேட்ட குரல் மாதிரி இருக்கிறதே!

அருகில் வந்து நின்ற அந்த உருவத்தை நோக்குகிருன் ஒற்றன்.

காளிங்கன், அக்கினிக் கோபமாய் அருகில் நிற்கிருன். ''வகையாக அகப்பட்டுக்கொண்டாய் வாளையும் குறுவாளையும் எடுத்து விட்டு இவனைச் சோதியுங்கள்!''

ஓ... வஞ்ச நாகம் விஷம் கக்கத் தொடங்கி விட்டது என்று கறுவிக் கொள்கிருன், அந்த ராஜ விசுவாசம் நிரம்பிய ஒற்றன்.

சோதனையிட்டுப் பார்த்ததில் ஒன்றும் கிடைக்கவில்லை.

ஆத்திரமோ ஆத்திரம்.

''எங்கே சென்று திரும்புகிருய்?''

ஒற்றன் வாய் திறக்கவில்லை.

''எங்கே சென்று திரும்புகிருய்?''

மௌனம்.

கன்னங்களில் பளார், பளார் என்று அறைகள் விழுகின்றன.

அப்போதும் மௌனம்.

''நீ அடிக்கடி தியாகவல்லியை ரகசியமாகச் சந்தித்ததிலிருந்து சந்தேகப்பட்டேன். நேற்றைய முந்திய நாள் காலை, நீ தியாகவல்லியிடம் விடைபெற்றுச் சென்ற போதே உன்னைப் பின் தொடர்ந்தேன். தவறவிட்டு விட்டேன். எப்படியும் இன்றிரவு தகவலுடன் திரும்புவாய் என்று அனுமானித்தேன். வீண் போகவில்லை.''

காளிங்கன் முகம் நெருப்பில் எரிகிறது...

''என்ன செய்தி? வாய் மூலமாக வேங்கைமார்பன் என்ன சொல்லியனுப்பினுன்? தியாகவல்லியிடமிருந்து கொண்டு சென்ற செய்தி என்ன?''

மௌனம்.

''ஊமையாக நடிப்பது என்று அடம் பிடித்தாயானுல் உடம்பு புண்ணுகிவிடும். உண்மையைக் கக்கிவிடு.''

மௌனம்.

வாளையுருவி ஒற்றனுடைய நெற்றிப் பொட்டில் அதன் முனையை வைத்துக் கேட்டான். ''சொல்லி விடு.''

மௌனம்.

வாள்முனையை நெற்றிப் பொட்டில் சற்றே அழுத்த, அங்கே குங்குமம் பரவியது.

அப்போது உடனிருந்த பாண்டிய வீரர்களில் ஒருவன் சொன்னுன்: ''அந்தரங்க மெய்க்காப்பாளரே! இது அடாது. கண்டிக்க நமக்கு உரிமையுண்டு. தண்டிக்க மாமன்னர் ஒருவருக்கே உரிமையுண்டு. அவரது உத்தரவு பெற்று எப்படி வேண்டுமானுலும் உண்மை யறிய இம்சிக்கலாம். ஒருகால் பிடிபடாது இவன் சாகசம் காட்டுகிற போது ஏற்படுகிற மரணத்துக்கோ, காயங்களுக்கோ அனுமதியுண்டு; அர்த்தமும் உண்டு. பிடிபட்ட பிறகு மாமன்னர் முன் கொண்டு செல்வது தான் அரச நியாயம்.''

நெற்றிப் பொட்டிலிருந்து வாள் முனை நீங்குகிறது. ரத்தம் கோடாக வழிகிறது.

ஆத்திரப்பட்டு விட்டோம் என்கிற அவஸ்தையுடன், ஒற்றனது குதிரைப்பக்கமாகச் சென்று அதனைத் தட்ட, ...

அது ''சீ ராஜத் துரோகி' என்பது மாதிரி கனைத்தது.

ஒரு நொடியில் ஊகித்துக் கொண்டான் காளிங்கன். அவனும் வேங்கைப் பயிற்சிக்குரிய யுத்த நாயகனல்லவா? வேங்கைப் போர் முறை ரகசியமறிந்தவனல்லவா? ''குதிரையைச் சோதியுங்கள்!'' என்று அலறுகிருன்.

அதுபோலவே சோதனை போட்டதில்...

குதிரையின் மார்பு பக்கமாகச் சுற்றிச் சென்ற கனத்த தோல் பட்டையின் அடியில் கவனமாகச் செருகப்பட்ட ரகசிய ஓலை அகப்பட்டுக் கொண்டது.

''என்னையே உன்னிடம் ஒப்படைக்கிறேன்; கவனம்.''

ஒற்றன் காதுகளில் வேங்கையின் உறுமல் கேட்கிறது.

என்ன செய்யமுடியும்? (தொடரும்)

---



புதிதாக ஒரு பிரச்னை: இப்போது நம் நாட்டில் மாற்று உறுப்புகள் வைத்து சஸ்திர சிகிச்சை செய்வதில் முன்னேற்றம் காணக் காண உடல் உறுப்புக்கள் திருட்டும் நடைபெறுகிறது. ஓர் உடல் ஜாம்நகர் ஆஸ்பத்திரியில் பரிசோதனைக்காக சவக் கிடங்கில் வைக்கப்பட்டிருந்தது. டாக்டர்கள் பரிசோதனைக்குச் சென்ற சமயம் உடலிலிருந்து இரண்டு கண்களும் தோண்டி யெடுக்கப்பட்டு இருந்தன. இது இம்மருத்துவமனையில் நடைபெற்ற இரண்டாவது உடல் உறுப்புத் திருட்டாகும்.

—இந்தியன் எக்ஸ்பிரஸிலிருந்து: நாகுவேலன்.

கார்டூன்
மில்க்
பிஸ்கெட்ஸ்




# சுவை மண்டலத்தில் சுகமான பயணம்!

**கார்டூன் மில்க் பிஸ்கெட்ஸ்**
**சுவையும் ஊட்டமும் நிறைந்த பாலமுதம்.**
சுவைத்துப் பாருங்கள். மீண்டும் மீண்டும்
சுவைக்கத் தூண்டும்.






**இந்தியன் ஃபுட்ஸ்**
பிரைவேட் லிமிடெட்
'ரிவர்சைட்' திருப்புவனம் 623611

**கார்டூன் மில்க் பிஸ்கெட்ஸ்—**
**பிஸ்கெட் உலகின் புதிய கவிதை!**

ADWAVE/IF/2646

தமிழ் நாடெங்கும் கிடைக்கும். விற்பனையாளர்கள் இல்லாத இடங்களில் விற்பனையாளர்கள் தேவை.

# அந்த முக்கால் மணி நேரம்...

மலர்வண்ணன்

'வட்டமிடும் பூச்சிகள் சிறகடிக்கப் பறக்கிற மாதிரி என்ன அற்புதமான காட்சி இது?' – தன்னுள் வியந்தவாறே 'எஸ்' போட்ட இரும்புக் கேட்டைத் தாண்டி ஸ்கூலுக்குள் நுழைந்தான் பரத்.

குறிஞ்சிப் பூவுக்குள் முல்லைப்பூப் பூத்ததைப் போலச் சீருடை. மாணவிகள் அவனைத் திகைக்க வைத்தனர்.

அகன்று விரிந்த அந்த விளையாட்டுத் திடலைப் பார்த்தவாறே ஹெட் மிஸ்ட்ரஸ் அறையை அடைந்தான் பரத்.

கால்கள் தரையில் தேய்ந்தன.

அகலமான பிரேம் வைத்த சோடாபுட்டிக் கண்ணாடியை மெல்ல மேலே தள்ளியவாறே பரத் பக்கம் திரும்பிய ஹெட் மிஸ்ட்ரஸ் ''யெஸ்'' என்றாள்.

உள்ளே போனான். மறுபடியும் ஒரு 'யெஸ்'.

''நான்... மிஸ் வித்யாவைப் பார்க்கணும்.'' உதடு நிஜமாகவே இழுத்துக் கொண்டது. 'ஏதாவது தவறாக நினைத்துக் கொள்வாரோ?''

ஹெட் மிஸ்ட்ரஸின் முகம் இறுகியது. ''நீங்க?''

''நான்... நான் பரத்.''

'வேறு என்ன சொல்ல? எனக்கும் அவளுக்கும் கல்யாணம் நிச்சயமாகி இருக்கிறது. அவள் அழகு முகத்தை ஒரு தடவை காண வேண்டும் என்று ஆசையோடு வந்திருக்கிறேன் என்று சொல்ல முடியும்?''

''நீங்க எதுக்காக அவங்களைப் பார்க்கணும்?''

கடுமையான சிடுசிடுப்பான குரல். பரத் அவளையே பார்த்தான். வயது நாற்பதுக்கு மேல் இருக்கும். இறுகிய முகம். மேஜை பெயர்ப்பலகை மிஸ் மரகதம் எம்.ஏ.எம்.எட் தலைமை ஆசிரியை என்றது.

'தன்னோட ஒத்துப்போகாத ஒரு பெண்ணைத் தெய்வமா மாத்தற இயற்கை ஒத்துப்போகாதவங்களை எப்படிச் சோதித்து விடுகிறது?'

பரத் சிந்தனையில் இருந்து விடுபட்டான். சொன்னான்.

''சாரி மேடம். வித்யா ரொம்பவேண்டியவங்க. ஒரு முக்கியமான பர்சனல் மேட்டர் சம்பந்தமா நான் அவங்களைப் பார்க்கணும்.''

ஹெட் மிஸ்ட்ரஸ் உள்ளுக்குள் பொருமினாள். வித்யாவின் மீது அவளுக்கு எப்போதுமே ஒரு கண். ஓர் அழகான வாலிபன் வேறு அவளைத் தேடி வந்து விடவே, இன்னும் அதிகமாக வெகுண்டாள்.

'இவனைத் திருப்பி அனுப்பவும் முடியாது. சரி, அவளைப் பார்த்துத் தொலையட்டும். வேறு ஏதாவது விஷயத்தில் வித்யா மாட்டினால் ஒரு பிடி பிடித்து விடலாம். சடைபிக்கு நோட்ஸ் ஆப் லெசனுவது தாமதமாகாதா என்ன?

''ஓ.கே. மிஸ்டர். ரைட் சைட்லே... லாஸ்ட் ரூம். அதுதான் டீச்சர்ஸ் ரூம். அங்கே போய்ப் பாருங்க.''

''தேங்க் யூ மேடம்–'' பரத் நகர்ந்தான்.

பள்ளிக்கூட மணி 'டண்' என்றது. மணி இரண்டே முக்கால். வெளியே வந்த பரத் ''ரைட் சைடில்'' திரும்பி ''லாஸ்ட் ரூமை'' அடைந்தான்.

ஒரு 'எக்ஸ்க்யூஸ் மீ'யைப் படரவிட்டான்.

பெரிதாகக் கொண்டை போட்ட சயின்ஸ் டீச்சர் கேட்டாள்.



''நீங்க?''

''பரத். மிஸ் வித்யாவைப் பார்க்கணும்.''

சயின்ஸ் டீச்சர் 'சனுக்'கினாள்.

''வித்யாவுக்கும் டீச்சர்ஸ் ரூமுக்கும் எப்பவுமே ராசியில்லே. லேப்ரரி தான் அவள் குடியிருக்கும் கோயில்!''

பரத் சந்தோஷமானான். சும்மா வெட்டிக் கதை பேசாமல் தன் மனைவி(!) லேப்ரரியில் பொழுதைக் கழிக்கிறாள். 'வெரி குட்'.

டீச்சர்ஸ் ரூமுக்குள் இருந்து வந்த இசகிகளைக் கடந்து லேப்ரரிக்கு வந்தான் பரத்.

''எக்ஸ்க்யூஸ் மீ. நான் மிஸ் வித்யாவைப் பார்க்கணும். இங்கே இருக்கிறதா டீச்சர்ஸ் ரூம்லே சொன்னாங்க.''

''இல்லையே சார். பஸ்ட் பீரியட் ஃபுல்லா இங்கே தான் இருந்தாங்க. பெல்லுக்கு ஒரு அஞ்சு நிமிஷம் முன்னாடி போயிட்டாங்க. 'லேப்லே ஏதோ செய்யணும்'னு சொன்னாங்களே. ஒண்ணு செய்யுங்க. பக்கத்திலே 'லேப்' இருக்கு. பாருங்களேன்'' என்றார் நூலகர்.

பரத் 'லேபு'க்குள் நுழைந்தான்.

அட்டெண்டர் மத்தியானத் தூக்கத்தில் இன்னொரு டீ. ப. பற்றிய கனவில் இருந்தான். அரிவாள் ஞாபகம் தனி.

பரத் [illegible]த்தான்:

''சார் நான் மிஸ் வித்யாவைப் பார்க்கணும். அவங்க இங்கே வந்ததா லேப்ரரியிலே சொன்னாங்க.''

அட்டெண்டர் சோகமாக 'ப்ச்' கொட்டினான். சாவுச் செய்தியைச் சொல்கிறவன் மாதிரி சொன்னான்:

''இங்கே வரலே சார். கொஞ்சநேரம் முன்னாடி அவங்களும் பிசிகல் எஜுகேஷன் டீச்சரும் பேசிக்கிட்டிருந்தாங்க. நீங்க எதுக்கும் கேம்ஸ் ரூமுக்குப் போய்க் கேட்டுப் பாருங்க.''

அட்டெண்டர் சொல்லிவிட்டு டீ. ஏ. கனவுக்குள் நுழைந்தான்.

''கேம்ஸ் ரூம் எங்கே இருக்கு...?''

அட்டெண்டர் வலது பக்கம் கையைக் காட்டினான்.

பரத் அந்தப் பெரிய மைதானத்தைத் தாண்டி, அதற்கு அப்பால் இருந்த 'கேம்ஸ் ரூமை' அடைந்தான்.

இரண்டு மூன்று கீச்சுக் குரல்கள் 'மிஸ்... மிஸ்...' என்றன.

''என்னடா?'' — தலைநிமிர்ந்த கேம்ஸ் டீச்சர் இவனைப் பார்த்தான்.





## அருள் வாக்கு

துஷ்டர்களால் நமக்கு வழியில் ஆபத்து உண்டாகிறதென்று போலீஸ்காரனைக் கூப்பிடுகிறோம். அந்தப் போலீஸ்காரன் துஷ்டனை விரட்டி விட்டு நம்மை ஆபத்திலிருந்து காப்பாற்றியபின் நம்மையும் பயமுறுத்தித் தண்டிப்பானா என்ன? அல்லது தானும் நம்மோடேயே வீட்டுக்கு வந்து இருந்து விடுவானா? நம்மை ஆபத்திலிருந்து ரக்ஷித்து வீட்டில் சேர்த்தபின் அவன் போய் விடுவான் அல்லவா? இம்மாதிரிதான் கெட்ட குணம்போக ஈச்வரனை எண்ணுகிறோம். இந்த ஸ்மரணையானது கெட்டதை விரட்டி விட்டு நம்மை, அறம், பொருள், இன்பம், வீடு என்பதில் 'வீடு' என்கிறார்களே, அதில் சேர்த்து விட்டுத் தானும் போய் விடும். மனசை வைத்துக் கொண்டு ஆரம்பிக்கும் பக்தி மனஸ் அற்றுப் போகும் ஞானத்தில் கொண்டு விட்டுவிடும்.

ஸஜ்ஜனங்களின் கூட்டுறவும்இப்படி தான் எல்லா உறவும் அற்றுப்போகிற நிலைக்குக் கொண்டு விட்டுவிடும். ஒருவிதமான பற்றும் இல்லாமலிருக்க வேண்டும் என்றால் அது உடனே ஸாத்யமாயில்லை. அதனால் கெட்ட ஸஹவாஸத்தை விட்டு ஸத்ஸங்கம் சேர வேண்டும். இதுவும் உறவுதான். ஆனால் ஒரு பழம் நன்றாகக் கனிந்தபின் தானாக இற்று விழுந்து விடுகிறமாதிரி இது ஒருநாள் முடிந்து விடும். இதை விட உயர்ந்த ஏகாந்த அனுபவத்தில் சேர்த்து விடும்.

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள்

''சாரி,ப்பார் டிஸ்டர்பன்ஸ். மிஸ் வித்யா இங்கே இருக்கிறதாச் சொன்னாங்க. நான் அவங்களைப் பார்க்கணும்.''

''இல்லையே... டீச்சர்ஸ் ரூம்லே பார்த்தீங்களா?''

''எல்லா இடத்திலேயும் பார்த்திட்டேன். உங்களோட பேசிட்டு இருந்ததாச் சொன்னாங்க...''

''பேசிட்டிருந்தது என்னவோ உண்மை தான். ஆனா என்னோட வரலை. ஆ, இப்போ ஞாபகம் வருது. ஒரு பாட்டுப் போட்டி சம்பந்தமா மியூஸிக் டீச்சரைப் பார்க்கணும்னு சொல்லிட்டிருந்தாங்க. நீங்க மியூஸிக் ரூம்லே பார்த்தீங்களா?''

''போய்ப் பார்த்துக்கிறேன் தேங்க்ஸ். மியூஸிக் ரூம் எங்கே இருக்கு?''

''ஹெச். எம். ரூமுக்குப் பக்கத்திலே!''

''வரேன்.''

வந்தான். மியூஸிக் ரூம் பூட்டி இருந்தது. தடுமாறினான். 'இனி என்ன செய்ய?'

''ச்சே, ஸ்கூல் பூரா அலைஞ்சாச்சு. ஒரு டீச்சரைப் பார்க்கறது இவ்வளவு கஷ்டமா?''

ஸ்கூல் பெல் 'டண், டண்' என்றது. மணி மூன்றரை. 'மை காட்!

தனது அறையிலிருந்து வெளியே வந்த ஹெட் மிஸ்ட்ரஸ் இவனைப் பார்த்தாள்.

''என்ன பார்த்திட்டீங்களா?''

பரத் கொஞ்சம் எரிச்சலோடு சொன்னான். ''இல்லே, ஸ்கூல் பூரா அலைஞ்சிட்டேன். டீச்சர்ஸ் ரூம், லைப்ரரி, லேப், கேம்ஸ் ரூம், மியூஸிக் ரூம், ஒரு இடம் பாக்கி இல்லே. சரி, நான் அப்புறமா வீட்டிலேயே பார்த்துக்கறேன்.''

பதிலுக்குக் கூடக் காத்திராமல் வெளியே நடந்தான்.

ஹெட் மிஸ்ட்ரஸ் கறுவினாள்.

'ஸ்கூல் பூரா அலைஞ்சும் இவ கிடைக்கலியாமே, அப்போ... அப்போ ஸ்கூல் அவர்ஸ்லே பெர்மிஷன் இல்லாம எங்கோ வெளியே போயிருக்கா. சரி அவள் பேர்ல நடவடிக்கை எடுக்க வேண்டியதுதான்.'

தன் அறைக்கு வந்த ஹெட்மிஸ்ட்ரஸ் பொத்தென்று எரிச்சலோடு அமர்ந்தாள்.

கிளார்க் அட்டெண்டென்சோடும், சம்பளக் கவரோடும் வந்தான்.

''ஓ... இன்றைக்குச் சம்பளம்.''

அவசர அவசரமாக வித்யாவின் பெயரைத் தேடினாள். அவள் இன்னும் சம்பளம் வாங்கவில்லை.

''வித்யா வந்தா உடனே என்னைப் பார்க்கச் சொல்'' என்றவாறே கையெழுத்திட்டாள்.

**நா**லேகால் மணிக்குப் பள்ளி இறுதி மணி அடித்த ஐந்தாவது நிமிஷம் வித்யா ஹெச். எம். ரூமுக்குள் நுழைந்தாள்.

ஹெட்மிஸ்ட்ரஸ் கிண்டலாக ஆரம்பித்தாள். ''உங்களைப் பார்க்க பரத்'னு ஒருத்தர் வந்திருந்தார்.''

வித்யாவின் முகத்தில் வெட்கம் படர்ந்தது. 'அவர்... இங்கே... ச்சே...' அவளைக் குரூரமாகப் பார்த்தாள் ஹெட்மிஸ்ட்ரஸ்.

''என்ன பேச்சையே காணோம். சரி, நீங்க பள்ளிக்கூட நேரத்திலே ஸ்கூல்லே இல்லேன்னு தகவல் வந்திருக்கு. பர்மிசன்கூடப் போடாம எங்கே போனீங்க?''

வித்யா திகைத்தாள்.

''நோ மேடம்... நான் காலையிலே இருந்தே இங்கேதான் இருக்கிறேன், எங்கேயும் போகலே.''

''நோ. மிஸ்டர் பரத் உங்களை முக்கால் மணி நேரத்துக்கு மேலே தேடி அலைஞ்சிருக்கார். டீச்சர்ஸ் ரூம், லைப்ரரி, லேப், கேம்ஸ் ரூம், மியூசிக் ரூம்... ஒரு இடம் கூடப்பாக்கி யில்லே. உண்மையைச் சொல்லுங்க... இல்லேன்னு நான் உங்க மேலே ஆக்ஷன் எடுக்க வேண்டி வரும்.''

''நோ மேடம் நான்...''

பரத்தின் வருகை ஒருபக்கம் இழுக்க, மேடத்தின் கோபம் மறுபக்கம் இழுக்க, நடுவில் துவண்டாள் வித்யா.

''சாரி, மிஸ் வித்யா... எனக்கு வேறு வழியில்லே... இன்னைக்கு இரண்டேமுக்கால் மணியிலே இருந்து மூணரை மணி வரைக்கும் நீங்க ஸ்கூல்லே இல்லேன்னு ப்ரூவ் ஆயிடுச்சு. அதுக்கு அப்புறம் எப்பவோ பின்வழியா நுழைஞ்சிருக்கீங்க. இதுக்கு முன்னாடியும் இதுமாதிரி பல தடவை நீங்க செஞ்சிருக்கிறதா நான் சந்தேகப்படறேன். ஆகவே...''

பரத் பற்றிய தடுமாற்றத்தில் இருந்த வித்யா சட்டென்று விடுபட்டாள்.

''மேடம்... ஒன் மினிட்... என்ன டைம் சொன்னீங்க?''

''டூ ஃபோர்ட்டி ஃபைவ் டு த்ரீ தர்ட்டி... தட் டிஸ் செகண்ட் பீரியட்...''

''என்னை எங்கெங்கே தேடினீங்க...''— இண்டல் கலந்திருந்தது.

''ஸ்கூல் முழுவதும். அவரே சொன்னார். டீச்சர்ஸ் ரூம், லைப்ரரி, லேப், கேம்ஸ்ரூம், மியூசிக் ரூம்... எல்லாம் தேடி இருக்கிறார்.''

அடுத்த நிமிடம் வித்யா பொங்கி வரும் சிரிப்பை அடக்க முடியாமல் கலகலத்தாள்.

''மிஸ் வித்யா... வாட் நான்சென்ஸ்!''

—அதட்டலான குரல்.

''சாரி மேடம்... அந்த நேரத்திலே நீங்க சொன்ன இடங்களை விட ஒரு முக்கியமான இடத்தில் இருந்தேன்.''

''வாட் டு யூ மீன்... ஒரு ஸ்கூல்லே இதைவிட முக்கியமான இடமா?''

''யெஸ் மேடம். நான் டென்த் ஏ செக்‌ஷன்லே பாடம் நடத்திட்டிருந்தேன். க்ளாஸ் ரூமை அவர் வேணும்னு மறந்திட லாம்... ஆனா நீங்க...?''

''வாட், க்ளாஸ் ரூம்லேயா?''

''யெஸ் மேடம். டைம் டேபிளைப் பார்க்கறீங்களா?''

''நோ... நோ... யூ கேன் கோ...'' என்றவாறே எந்த ஃபைலுக்குள் தலையை நுழைத்துக் கொள்ளலாம் என்று தேடிய ஹெட்மிஸ்ட்ரஸால் சம்பளக் கவரைத் தான் எடுக்க முடிந்தது!

# பெண் பார்த்தபோது

கவலை வேண்டாம், இரு பாலாரும் கலந்துகொள்ளக் கூடிய போட்டிதான்



**போட்டி: 12**

முதன் முதலில் உங்களைப் பெண் பார்க்க வந்தபோது அல்லது நீங்கள் பெண் பார்க்கப் போனபோது உங்கள் மனநிலை எப்படி இருந்தது? என்ன நடந்தது? இமே எழுதி இந்த அரைப் பக்கத்தைக் கத்தரித்து அனுப்பவும், நினைவிருக்கட்டும்: சுவை, சுருக்கம், உறையின் மீது ''பெண் பார்த்தபோது' எனக் குறிப்பிடல். பரிசு பெறும் துணுக்குகள் பிரசுரமாகும். தவிர பட்டுப் புடவை பரிசு, குலுக்கல் முறையில் ஒருவருக்கு உண்டு.

முடிவு தேதி: 6–8–84

41 பட்டுப் புடவைகளுள் ஒன்றைப் பெற நல்ல வாய்ப்பு. வாரம் தவறாமல் போட்டிகளில் பங்கு பெறவும்.

என் பெயர் : .............................

விலாசம் : .............................

.............................

## பரிசுத் திட்டம்

## பட்டுப் புடவை

# வட்டமேஜை

● இரு ஆண்டுகளுக்கு முன்பு தில்லை விளாகத்தில் ; பாங்க் ஆப் தமிழ்நாடு கிளை திறப்பு விழாவுக்கு வட்டார அதிகாரியாகச் சென்றிருந்தபோது ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தியின் திவ்ய தரிசனம் கிட்டியது. எத்தனை நேரம் பார்த்துக் கொண்டிருந்தாலும் போதாதுதான். மனத்தைக் கொள்ளை கொள்ளும் அழகு. ஆனந்தியின் கட்டுரை என்னைத் தில்லை விளாகத்துக்கு மறுபடியும் அழைத்துச் சென்றது.
சென்னை-90 பி.என். வேங்கடராமன்

● தில்லைவிளாகம் கோதண்டராமர் திருக்கோயில் பற்றிய கட்டுரையில் ஔவையார் திருக்கோவிலைப் பற்றி சிறு குறிப்பு உள்ளது.
துளசியாப் பட்டினம் என்னும் கிராமத்தில் அமைந்துள்ளது அருள்மிகு ஔவையார் விஸ்வநாதஸ்வாமி ஆலயம். ஔவையார் கோவிலுக்கு வடபுறம் ஒரு கல் தொலைவில் உள்ள கொல்லன் திடல் என்னும் இடத்தில் தங்கியிருந்ததாயும், அதுசமயம் இக்கிராமத்தில் வெள்ளம் சூழ்ந்து அதனால் கொல்லன் ஔவையை வேறு இடம் நாடிச் செல்லக் கூறியதாயும், அதற்கு ஔவை வெள்ளம் நம்மை எதுவும் செய்யாது எனக் கூறி இறைவனை நினைத்து, ''வள்ளனும் வெள்ளையாகி, வளவனும் பேரராகி கொல்லன் திடல் நீங்க போக பெருங்கடலே'' எனும் பாடலைப் பாடினார் எனவும், பாடியதும் சூழ்ந்திருந்த வெள்ளம் வளவ னாறு மூலம் கடலில் வடிந்தது என்றும் அறிகிறோம்.
துளசியாபட்டினம் ந. சவேமணி
நிர்வாக அதிகாரி

● கல்கி 8-7-84 இதழில் கவிஞர் நா. காமராசனின் 'ஞானபீடம்' கருத்து மணிகளைப் படித்த கையோடு 'ஞானபீட' பரிசு பெற்ற மாஸ்தி ஸ்ரீனிவாஸ அவர்களின் மலைமகத்தியைப் படித்தேன்.
மாஸ்தி இந்தியர்களின் ஆஸ்தி.
சென்னை-75 வி. ச. வாசுதேவன்

● தன்னை அடக்கும் தண்டம் சண்டேன். மிகச் சிறந்த கேள்வி. பயனுள்ள விளக்கம்.
கும்பகோணம் டி. என். சீதாராமன்

● 'என்ட்ரன்ஸ் எக்ஸாம்' சிறப்பாக இருந்தது. ஆனால் பதில்களைக் கீழேயே கொடுத்து



'ரீக்' செய்து விட்டீர்களே. மறு வாரம் பிரசுரித்திருக்கலாமே.
சென்னை-35 கி. பூபால் சிங்

● 'வேகம்' வித்தியாசமான முறையிலும் நடையிலும் எழுதப்பட்ட வித்தியாசமான சிறுகதை.
கிருஷ்ணகிரி ஆர். பூபாலன்

● ''விழி போயிட்டா''ன்னு நம்பவே முடியவில்லை. மனத்தை என்னவோ செய்கிறது.
சென்னை-90 ஸ்ரீமதி சகுசம் கோபால்

● இந்துமதியின் தொடர் கதையைப் படிக்கப் போகிறோம் என நினைக்கவே மனத்திற்கு இதமாக — சுகமாக உள்ளது.
மைசூர் வெளிக்கடை டி. ராஜன்

● லால்ஜி கோது பரம்பரையில் வந்தவர் திரு கிஷன் லால் என்று 27-5-84 இதழில் குறிப்பிட்டிருப்பது தவறான செய்தி. எல்.ஜி. பெருங்காயம் தயாரிப்பு நிறுவனத்தை 1894க்கு முன்பே தொடங்கிய என் தாத்தா லால்ஜி கோது இன்று குஜராத் மாநிலத்தைச் சேர்ந்த கட்ச் பகுதியில் ஒரு சிற்றூரில் பிறந்தவர்.
சென்னை-79 நளின் கே. மர்சண்ட்

# விண்ணப்பத்தாள் விற்பனையிலேயே கொள்ளையோ கொள்ளை

● வீட்டு வசதி வாரிய 'விகாரங்கள்' பத்தி பத்தியாய்ப் படித்து, பற்றி எரிந்தது வயிறு.
எம். ஐ. ஜி. யில் 30 வீடுகள் இருந்தால் 30 ஆயிரம் அப்ளிகேஷன்கள் விற்பனை ஆகும். (30,000 x 50) 15 லட்சம் ரூபாய் அதிலேயே கிடைக்கும். ஆக இதுவும் ஒரு வகை லாட்டரி சூதாட்டமே. லாட்டரிக்காவது ஒரு எல்லை உண்டு. இதில் எத்தனை அப்ளிகேஷன் வேண்டுமானாலும் விற்கலாம்.
சரி, ஒரு முறை, இரு முறை, பல முறை வீடு கிடைக்காமல் போனவர்களுக்கு முன்னுரிமை உண்டா என்றால் மூச்.
பூந்தமல்லி நெடுஞ்சாலை, எக்மோர் இங்குள்ள தனியார் அபார்ட்மெண்ட்களில் மெயின்டனன்ஸ் சார்ஜ் 40 ரூபாயே. வந்து பார்க்கச் சொல்லுங்கள் எப்படி நிர்வகிக்கிறார்கள் என்பதை.
தவணை முறையில் பணம் செலுத்தலாம் என்பதைத் தவிர வேறு எந்த வகையிலும் வாரிய வீடு லாயக்கற்றது.
சென்னை-84 பொடுசி

(கடைசிக் கடிதம் பரிசு பெறுகிறது)

# சொல்லுங்களேன்!
# குடும்பத்தின் மிகவிருப்பமான ஆரோக்கிய பானமாக ஹார்லிக்ஸ் இருப்பது ஏன்?

## ரூ.5 லட்சத்திற்கும் அதிகமான பரிசுகளைப் பெறுங்கள் தமிழ் நாட்டில் மட்டுமே!



### முதல் பரிசு

ரூ. 75,000க்கும் அதிகமான பெறுமானமுள்ள ஒரு சொகுசு அம்பாசடர் மார்க் IV கார்.



### 5 இரண்டாவது பரிசுகள்

மின்னும் தங்கநகை செட்டுகள், ஒவ்வொன்றும் ரூ. 25,000 மதிப்புடையது.



### 200 மூன்றாவது பரிசுகள்

அருமையான ஃபிலிஃப்ஸ் 'டு-இன்-ஒன்', ஒவ்வொன்றும் ரூ. 1,500-க்கும் அதிகமான மதிப்புடையது.

**மேலும்**

**800 முந்திக் கொண்டோர் பரிசுகள்!**
மாதத்தில் இரண்டுமுறை, முதல் 200 பூர்த்தியான நுழைவுத்-தாள்கள் ஒவ்வொன்றுக்கும் ரூ. 50 பெறுமான பரிசு.

8320

## குடும்பம் முழுவதற்குமான ஒரு போட்டி

அனைவரும் பங்குக்கொள்ளக் கூடிய ஒரு எளிய போட்டியில் 1000-க்கும் அதிகமான கவர்ச்சிகர-மான பரிசுகளை ஹார்லிக்ஸ் வழங்குகிறது. கீழே 4 படங்கள் கொடுக்கப் பட்டிருக்கின்றன—ஒரு டாக்டர், ஒரு குடும்பத்தலைவி, ஒரு பாட்டனார், ஒரு குழந்தை. பக்கத்தில், அவர்கள் ஹார்லிக்ஸை ஏன் விரும்புகிறார்கள் என்று 4 கருத்துகள் கொடுக்கப்-பட்டிருக்கின்றன.

நீங்கள் செய்யவேண்டியது இவ்வளவே—இந்த கருத்துக்களை யார் யார் சொல்லியிருப்பார்கள் என்று இணைக்கவேண்டும். உதாரணமாக, டாக்டர் (A) கூறியது (2) கருத்து. இப்பொழுது, நீங்கள் எந்த படத்திற்கு எந்தக் கருத்து சிறப்பாக பொருந்-துகிறது என்பதைப் படங்களுடன் பொருத்திக் காட்டுங்கள்.

நுழைவுத்தாளில் உள்ள கோடிட்ட இடத்தில் நாங்கள் உதாரணத்தில் காட்டியுள்ளது போல பதில்களை எழுதி நிரப்புங்கள்.

## பிறகு...

பின்வரும் வாக்கியத்தை பூர்த்தி செய்யுங்கள்—
'ஹார்லிக்ஸ் குடும்பத்தின் மிகவிருப்பமான ஆரோக்-கிய பானம், ஏனெனில்....'

## நீங்கள் எத்தனை நுழைவுத்தாள்களை வேண்டுமானாலும் அனுப்பலாம்

கீழே கொடுக்கப்பட்டிருக்கும் நுழைவுத்தாளை நீங்கள் பயன்படுத்தலாம். அல்லது உங்கள் அரு-கிலுள்ள ஹார்லிக்ஸ் கடையிலிருந்து உங்கள் நுழைவுத்தாளை வாங்கிக் கொள்ளலாம். ஒவ்வொரு நுழைவுத்தாளுடனும் 450 g. அல்லது 800 g. அல்லது 1000 g. ஜாடியின் உட்புற அலுமினிய தகடு 'ஸீல்' ஒன்றை இணைத்து அனுப்பவேண்டும். நினைவிருக்கட்டும்: ஒவ்வொரு மாதம் முதல் தேதி-யும் மற்றும் 16-ம் தேதியும் வந்து சேரும் பூர்த்தி-யான முதல் 200 நுழைவுத் தாள்களுக்கு பிரத்யேகப் பரிசுகள் கிடைக்கும். ஆகையால், நீங்கள் முந்தினால், இப்பரிசைப் பெறுவதுடன் மற்ற பரிசுகளுக்கும் தகுதியுடையவர்களாக இருப்பீர்கள். நுழைவுத்தாளை முகவரிக்கு தபாலில் அனுப்புங்கள்:
ஹார்லிக்ஸ் ஃபாமிலி காண்டெஸ்ட் எச் எம் எம் லிட்.,
போஸ்ட் பேக் நம்பர்: 5637 சென்னை-600 006.

## விதிகள் மற்றும் வரைமுறைகள்

1. நுழைவுத்தாள்களை தமிழிலோ, அல்லது ஆங்கிலத்திலோ எழுதி அனுப்பலாம்.
2. எச்எம்எம் லிட், எச்டிஏ மற்றும் பாரி அண்ட் கோ லிட். ஊழியரோ, மற்றும் அவர்களது குடும்பத்தினரோ இதில் கலந்துகொள்ள முடியாது.
3. நுழைவுத்தாள்கள் சாதாரணத் தபாலில்தான் அனுப்பவேண்டும். பதிவுத்தபாலிலோ, நேரிலோ, அல்லது குறைவான தபால்தலை ஒட்டி அனுப்பினாலோ ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது.
4. நுழைவுத்தாள்களை சுதந்திரமான ஒரு நடுவர் குழு மதிப்பிடும். முற்றிலும் திருத்தமான நுழைவுத்தாள்களும், அவைகளில் எழுதிய வாக்கியங்களில் எல்லாவற்றையும்விட சிறந்ததாக கருதப்படுவதே தேர்ந்தெடுக்கப்படும்.

விதிகள் மற்றும் வரைமுறைகளின் விவரங்களிற்கு நுழைவுத்தாளுடன் உங்கள் விற்பனையாளர்களிடம் விசாரிக்கவும்.

| | | | |
|---|---|---|---|
| <br>A. டாக்டர் | <br>B. குடும்பத்தலைவி | 1.<br>குழந்தைப் பருவத்திலிருந்து 60 வருடங்களுக்கும் மேலாக நான் நம்பிக்கை வைத்துள்ள பழக்கம் இது. இந்த நாட்களில் நீங்கள் எவ்வளவு விஷயங்களைதான் நம்பமுடிகிறது. | 2.<br>ஆம், நான் அதை அருந்து-கிறேன்! எனது நோயாளிகளை-யும் ஒரு நாளைக்கு இருமுறை ஹார்லிக்ஸ் குடிக்கும்படி சிபாரிசு செய்கிறேன். |
| <br>C. பாட்டனார் | <br>D. குழந்தை. | 3.<br>ஹார்லிக்ஸ் எவ்வளவோ சுவையாக இருக்கிறது! அம்மா எனக்கு அதைப் பாலு-டன் கலந்துத் தருகிறாள். ஆனால் நான் அதை அப்படியே சாப்பிடுவேன்! | 4.<br>என் குடும்பத்தின் ஆரோக்-கியத்துடன் நான் விளையாட முடியாது. இப்பொழுது பால் இருக்கிற நிலையைப் பார்க்கும் போது, ஹார்லிக்ஸில் எனக்கு முழுப்பலனும் கிடைக்கிறது. |



சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்

| A. | B. | C. | D. |
|---|---|---|---|
| 2 | | | |

'ஹார்லிக்ஸ் குடும்பத்தின் மிகவிருப்பமான ஆரோக்கிய பானம், ஏனெனில்________

______________________________

பெயர்: ______________________________

முகவரி: ______________________________

______________________________

______________________________

இங்கே கத்தரித்து அனுப்பவும்

முந்துங்கள்!
போட்டி முடிவடையும் தேதி: 15 செப்டம்பர், 1984.







கருத்து: லலிதா செல்லப்பா

# கொறிக்கவு







கருத்து: சிவசக்தி

இன்ஸ்பெக்டர்: "திருடன் உங்களை மிரட்டினப்போ உங்களிட மிருந்தவெளி நாட்டுத் துப்பாக்கியை எடுத்துக்காட்டி யிருக்கலாமே?"

மற்றவர்: "அதுவாவது மிஞ்சட்டு மேன்னுதான் மறைச்சு வெச்சுக்கிட் டேன்."

அ. கதிர்வேல்.






கருத்து: காயத்ரி




# சிரிக்கவும்







உ. மாஸ்டர்: ''ஸ்பெஷலா சாதாவா சார்.''

மற்றவர்: ''ஸ்பெஷல்னு எப்படிப் போடுவீங்க.''

உ. மாஸ்டர்: ''கிளாஸைக் கழுவிப் போடுவோம்.''

துரை. அ. கதிர்வேல்.



# நா. பார்த்தசாரதி

[illegible] இயக்கத்தைத் [illegible] செய்து விடுவார்களோ என்று பயம் நிலவியது.

''மாங்குயில் கூவிடும் 'பூஞ்சோலை —அது நம் [illegible]

மாட்டை நினைக்கும் [illegible] சாலை''—என்று வருவதிலுள்ள சென்னைச் சாலைகளைப் பலமுறை சந்தித்தவர்களுக்கே 'கட்சியைத் தடை செய்வார்களோ' என்ற எண்ணம் மட்டும் பயத்தை உண்டாக்கியது. மாநகராட்சியைக் கைப்பற்றிய பின் மாநில ஆட்சியையும் கைப்பற்ற முடியும் என்ற நம்பிக்கை எல்லோருக்கும் வந்திருந்தது. அந்தச் சமயத்தில் ஒரு நாள் ஒரு முக்கிய வேலையாகக் கலந்து பேச வேண்டுமென்று அண்ணன் அவனைக் கூப்பிட்டனுப்பினர்.

(தொடரும்

## அத்தியாயம் 15

ஆட்சிக்கும் இயக்கத்திற்கும் வேண்டியவரான ஒரு வழக்கறிஞர் வீட்டில் அண்ணன் அவனை எதிர்பார்த்துக் காத்திருந்தார். அவன் போய்ச் சேர்ந்த போது அவனை மிகவும் பிரியத்தோடு வரவேற்றார். அண்ணனோடு இயக்க மூலவர்கள் என்று அவன் கருதிய வேறு சிலரும் இருந்தனர். தேர்தல் செலவுகளுக்கான நிதி வசூல், மாவட்ட வாரியாக இயக்கக் கொள்கைகளைப் பரப்பும் நாடகங்கள் நடத்துதல், தமிழகம் முழுவதும் மாணவர்களை ஒரு தீவிரமான போராட்டத்தில் ஈடுபடத் தயார் செய்வது ஆகிய வேலைகளில் நாடகங்கள், மாணவர்களைத் தயார் நிலைக்குக் கொண்டு வருவது ஆகிய இரண்டையும் அவன் பொறுப்பேற்க வேண்டும் என்று கட்சி மேலிடம் கருதியது. உரிமையோடு, ''தம்பி இவையிரண்டிற்குமே உன்னைத்தான் நம்பியிருக்கிறேன்'' —என்று அண்ணனே உத்தரவிட்டு விட்டார். கடமை, கண்ணியம், கட்டுப்பாடு மூன்றோடும் எதையும் தாங்கும் இதயத்தோடும் செயல்பட வேண்டும் என்றார். தவறு செய்பவர்களை மன்னிக்கவும் மறக்கவும் பழக வேண்டும் என்றார். தவறு செய்யாமலே கூட மற்றவர்களைக் குற்றம் சாட்டத் தயாராயிருந்தனர் சிலர். 'கலைஞர்களின் செல்வாக்கினால் இயக்கம் வளர்ந்திருக்கிறதா? அல்லது வளர்ந்து விட்ட இயக்கத்தின் செல்வாக்கினால் கலைஞர்கள் புகழும் பொருளும் பெறுகிறார்களா?'' — என்றொரு சர்ச்சை திருமலையை விரும்பாதவர்களால் எழுப்பப்பட்டது. இயக்கத்துக்குள்ளேயே தன்மேல் கோபமும், பொறுமையும் உள்ளவர்கள் இருக்கிறார்கள் என்பது திருமலைக்குத் தெரிந்தது. ஆனால், அந்தப் பொறுமை அவனை வீழ்த்தி விட முடியவில்லை. வேலூரிலும், மதுரையிலும் கூடிய இயக்க மாநாடுகளில் ஏற்கெனவே இருந்த யார் யாரோ காணாமற்போனாலும் தொடர்ந்து அவன் இருந்தான். பெயர் பெற்றான். விருதுநகர்த் தியாகி சங்கரலிங்கனார் சென்னை மாநிலத்திற்குத் 'தமிழ்நாடு' என்று பெயரிடக்கோரி உண்ணாவிரதமிருந்தார். அவருடைய கோரிக்கைக்குக் காங்கிரஸ் அரசு செவி சாய்க்கவில்லை. தன் இதய தெய்வமாகிய அண்ணனுடன் அவனும் சென்று விருதுநகர் முதியவர் சங்கரலிங்கனாரைச் சந்தித்து அவருக்கு மரியாதை செலுத்த முடிந்ததில் பெருமைப்பட்டான் திருமலை. 'தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி' என்று தம் கட்சிக்குத் துணிந்து பெயர் வைத்திருந்தவர்கள் அதே பெயரை மாநிலத்திற்கு வைக்காமல் வீண் பிடிவாதம் பிடித்தார்கள். சங்கரலிங்கனாரைப் போய்ப் பார்த்து மரியாதை செய்த தன் மூலம் மக்களிடம் தங்களுக்கு மரியாதை தேடிக் கொண்டார்கள் அவர்கள். 78 நாட்களுக்குப் பின் சங்கரலிங்கனார் உயிர்நீத்தபோது ஆட்சியின் வீண் பிடிவாதம் அவர்களுக்குப் புகழ் சேர்ப்பதாயில்லை. திருமலை வகையறா இதனை நன்கு பயன்படுத்திக் கொண்டனர். அதற்கு



# ழலைக் கனவு

முன்னை விடப் பொது மக்களிடம் தங்கள் மதிப்பும், மரியாதையும் பெருகத் தக்கவிதத்தில் பல காரியங்களை அடுத்தடுத்துச் செய்யும் வாய்ப்பு அவர்களுக்கு ஏற்பட்டது.

1962–இல் சீன ஆக்ரமிப்பின் போது அவர்கள் இயக்கம் மிகவும் பொறுப்புடன் நடந்து கொண்டது. கைவிட வேண்டும் என்று சிலர் வற்புறுத்திய பிரிவினைக் கோரிக்கையைக் கைவிடவும் இதுதான் தருணம் என்று தோன்றியது. அந்நிய ஆக்ரமிப்பிற்கு எதிராக நேரு பெருமகனாரின் கரத்தைப் பலப்படுத்த வேண்டுமென்று இயக்கத் தலைமை விடுத்த பெருந்தன்மையான அறிக்கை மக்களை மிகவும் கவர்ந்தது.

அந்த இயக்கத்துக்குப் பக்குவமும் விவேகமும் இருப்பதை மேலும் நிரூபிப்பது போல் மற்றொரு காரியமும் நிகழ்ந்தது. பிரிவினைத் தடைச் சட்டத்தின் கீழ் இயக்கமே நசுங்கி அழியும்படி விட்டுவிடுவதா அல்லது பிரிவினை கோரிக்கையைத் தியாகம் செய்து விட்டு இயக்கத்தை மட்டும் வளர்ப்பதா என்று முடிவு செய்ய வேண்டிய தருணம் வந்த போது சமயோசிதமாகப் பிரிவினைக்கோரிக்கையைக் கைவிடுவதாக இயக்கத் தலைமை அறிவித்தது. ''கண்ணீர்த் துளிகள் பதவி ஆசைக்காகத் திராவிட நாடு கொள்கையைக் காற்றில் பறக்க விட்டுவிட்டார்கள்'' – என்று கிண்டல் செய்தவர்களை

அவர்கள் பொருட்படுத்தவில்லை. திருமலையோ அண்ணனின் தீர்க்கதரிசனத்தையும், அரசியல் தொலை நோக்கையும் வியந்தான். தன் போன்றவர்களையும் இயக்கத்தையும் கட்டிக் காத்த இதய தெய்வத்துக்கு நன்றி கூறினார்கள் அவர்கள். திருமலையைப் போன்று அண்ணனுக்கு ஓரிரு ஆண்டுகள் இளமையாக இருந்த மூத்த தலைவர்கள் கூடப் பிரிவினைக் கோரிக்கையைக் கைவிட்டது பெரிய ராஜ தந்திரம் என்று கருதினார்கள். சீன ஆக்ரமிப்பின் போது நேரு பெருமகனாருக்கு அளித்த ஆதரவின் மூலம் இயக்கம் சிறு பிள்ளைத்தனமானது இல்லை, பொறுப்புள்ளது என்ற நம்பிக்கை வந்திருந்தது. அவனைப் போல் நாடகம், திரைப்படம், என்று இயக்கத்தில் வேறு கலைகள் மூலம் பயனடைந்து வந்தவர்களை ஒடுக்க வேலூர் மகாநாட்டில் அதை ஒரு பிரச்னையாக்க முயன்றவர்களை அண்ணன் வாயடைக்கச் செய்த விதம் திருமலை மலைக்கச் செய்திருந்தது. நீண்ட காலத்துக்கு அவன் அதை மறக்கவில்லை.

அவன் இயக்க வேலைகளாக அலைந்து அடுத்து வர இருக்கும் பொதுத் தேர்தலுக்கு நிதி திரட்ட ஊரூராக நாடகங்களும், கூட்டங்களும் போட்டுக் கொண்டிருந்த போது ஓர் இரவு செங்கல்பட்டில் நாடகம் முடிந்து இரவு இரண்டு மணிக்குக் காரில் சென்னை திரும்பினான்.

அவன் வழக்கமாக இரவு போய்த்தங்கும் இரண்டு மூன்று வீடுகளில் மிகவும் இளம் வாளிப்பாகிய ஒரு நடிகையின் வீட்டுக்கு எப்போதும் போல் அன்றும் போனான். அந்த நடிகையை ஹைதராபாத்திலிருந்து சென்னைக்குக் குடியேறச் செய்து வீடு வாங்கிக் கொடுத்து இரண்டு மூன்று படங்களில் கதாநாயகியாக நடிக்கவைத்து முன்னேற்றியதே அவன்தான். ஏறக்குறையத் தன்னோடு மட்டும் தான் 'சம்பந்தம்' வைத்துக் கொண்டிருக்கிறாள் என்று இவன் அவளைப் பற்றி நம்பிக் கொண்டிருந்தான்.

ஆனால் அன்று செங்கல்பட்டில் இயக்க நாடகம் முடிந்து அவன் அவள் வீட்டிற்குச் சென்ற போது இவனுக்குப் போட்டியாக முளைத்திருந்த வேறொரு பணக்காரத் தயாரிப்பாளர் டைரக்டரின் கார் அங்கே அவள் வீட்டு போர்டிகோவில் நின்று கொண்டிருந்தது. இரத்தம் கொதித்தது இவனுக்கு. அந்த நடிகை தனக்குத் துரோகம் செய்து விட்டதாக இவன் எண்ணினான். தான் இப்படித் துரோகங்களைத் தன்னையே நம்பி வந்த சண்பகம் தொடங்கி எத்தனையோ பெண்களுக்குச் செய்திருப்பது அவனுக்கு நினைவு வரவில்லை. அந்தத் தயாரிப்பாளர் வந்து போனது பற்றி அலட்டிக் கொள்ளாமல், அவர் போன பின் இன்னும் ஒரு மணி நேரம் கழித்து இவன் வந்திருந்தால் ஒருவேளை இவனையும் சிரித்துக் கொண்டே அவள் வரவேற்றிருக்கக் கூடும்தான். ஆனால் திருமலைக்கு இப்போது வெறி மூண்டு விட்டது. தான் பரத்தனாயிருக்கும் அதே வேளையில் தன்னிடம் பழகும் ஒவ்வோர் அழகிய பெண்ணும் பத்தினியாயிருக்க வேண்டும் என்று எண்ணும் சுயநலமான சிந்தனை அவனிடம் என்றுமே இருந்தது. தனக்கு அடிமை போலிருந்த சண்பகத்தை அவன் பெரிதாக ஒன்றும் வாழ வைத்துவிடவில்லை. தன்னிடம் அழகிய உடலை ஒப்படைத்து இணைந்திருந்த மற்றொரு பெண்ணிடமும் அவன் துரோகியாகவே நடந்து கொண்டான். தான் யாருக்கும் துரோகம் செய்யலாம். தனக்கு யாரும் துரோகம் செய்ய நினைக்கவும் கூடாது என்கிற இந்த நிலப்பிரபுத்துவ மனப்பான்மையின் வேர் அவனுள் ஆழ இறங்கியிருந்தது.

திரு அங்கே தோட்டத்தில் துணிகள் காயப் போட்டிருந்த ஒரு புத்தம் புது நைலான் கயிற்றை இழுத்துத் தயாராக வளையம் போட்டு வைத்துக் கொண்டு அவர்கள் இருந்த ஏ. சி. அறையின் வாயிலில் காத்திருந்தான். பஞ்சமா பாதகங்களில் அவன் முழுத் தகுதியடையக் கொலை ஒன்று தான் இதுவரை மீதமிருந்தது. இன்று அதையும் செய்யக் கூடிய வெறி அவனுக்குள் வந்திருந்தது. படங்களிலும், நாடகங்களிலும், கதைகளிலும் பார்த்துக் கொலை என்பது சுலபமானது, செய்ய முடிந்தது, செய்யக் கூடியது என்றெல்லாம் தோன்றினாலும், கைகளும், மனமும் நடுங்கின. உடம்பில் வேர்த்துக் கொட்டியது. கொஞ்ச

### குழந்தை இலக்கியத்தில் முதல் டாக்டர்

தமிழ்க் குழந்தை இலக்கியத்தில் ஆய்வு நிகழ்த்தி முதல் முதலாக டாக்டர் பட்டம் பெற்றிருக்கிறார் திருமதி அம்புஜம் யுவசந்திரா. இவர் சென்னை, இராணிமேரி கல்லூரியில் தமிழ்த் துணைப் பேராசிரியராகப் பணிபுரிகிறார்.

குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா எழுதிய 50—க்கு மேற்பட்ட நூல்களைக் கடந்த நான்கு ஆண்டுகளாக ஆய்வு செய்து, இப்பட்டத்தை இவர் பெற்றுள்ளார். வள்ளியப்பாவின் கவிதைகளை முன்பே மதுரை காமராசர் பல்கலைக் கழகத்திலும், கேரளப் பல்கலைக்கழகத்திலும் ஆய்வு செய்து எம். ஃபில். பட்டம் பெற்றிருக்கின்றனர். ஆயினும் அவரது படைப்புக்கள் அனைத்தையும் ஆய்ந்து டாக்டர் பட்டம் பெற்றிருப்பவர் அம்புஜம் யுவசந்திராதான்.





தஞ்சை மாவட்டம் முழுவதும் தீவிர விவசாயம் செய்தால் தமிழ்நாட்டில் வேறு மாவட்டங்களில் விவசாயம் செய்யத் தேவையில்லை. தமிழ்நாடு முழுவதும் தீவிர விவசாயம் செய்தால் இந்தியாவில் பிற மாநிலங்களில் விவசாயம் செய்யத் தேவையில்லை. இந்தியா முழுவதும் தீவிர விவசாயம் செய்தால் உலகத்தில் வேறு நாடுகளில் விவசாயம் செய்யத் தேவையில்லை.

ஓர் அமெரிக்க விவசாயி கூறியது: தகவல்: தேனி. எஸ். மாரியப்பன்.

நேரம் தான் அப்படி. பின்பு துணிவு வந்து விட்டது.

அவளும், அவனும் சிரித்தபடியே ஏ.சி. அறையின் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்த போது மறைந்திருந்த அவன் தயாராக நைலான் கயிற்றில் செய்து வைத்திருந்த வளையத்தை அந்த ஆளின் கழுத்தில் கச்சிதமாக விழுகிறபடி வீசிக் கயிற்றின் இரண்டு நுனிகளையும் விரைந்து கண்டி இழுத்து இறுக்கிய போது ஒரேசமயத்தில் இரண்டு அலறல்கள் எழுந்தன. ஒன்று மாட்டிக் கொண்டவனுடையது. மற்றொன்று அவளுடையது. கயிற்றை அவன் கைகள் இழுத்து இறுக்கிய வேகத்தில் குரலும் குரல்வளையும் ஒடுங்கி ஓய்ந்தன. 'ஏதாவது மூச்சு விட்டால், நீயும் தொலைந்தாய்' – என்று சைகையினாலேயே அவளையும் மிரட்டினான். வாசலில் இருந்து கூக்குரல் கேட்டு ஓடிவந்த கூர்க்காவை அவளைக் கொண்டே திருப்பி அனுப்பச் செய்தான். கொலையுண்ட ஆளை அவர் காரிலேயே சாய்ந்தாற் போல உட்கார வைத்து நள்ளிரவில் கடற்கரையோர உட்சாலையில் கொண்டு போய் விட்டுத் திரும்பினான். பல ஆண்டுகளுக்கு முன் எழிலிருப்பு ஜமீனின் உள்பட்டணத்திலிருந்து அவனை இப்படிச் சிலர் கொலை செய்ய முயன்று அடித்துக் கொண்டுவந்து தேரடியில் போட்ட போது அவன் அப்பாவி; அநாதை. இன்றோ வாழ்க்கையின் சகலவிதமான சூதுவாதுகளும் வெற்றி மார்க்கங்களும், தெரிந்த அரசியல்வாதி. அவனால் முடியாதது எதுவுமில்லை. அன்றிரவு முழுவதும் கட்சி நாடகக் குழுவுடன் செங்கல்பட்டில் இருந்ததாகப் பக்காவான அலிபி தயாரிக்க முடிந்தது. விரோதிகளை விரைந்து அழித்து விடத் துணியும் அரசியல் எச்சரிக்கையுணர்ச்சிதான் இந்தக் கொலையை அவன் செய்யத் தூண்டியது. வெற்றிப் பாதையில் தனக்கு இடையூறாக இருப்பவர்களை அகற்றுவதும் அப்புறப்படுத்துவதும் தவறில்லை என்ற உணர்வு அரசியலில் சகஜமானதாக நினைக்கப் பட்டது. இந்தக் கொலைக்குப் பின் அவளிடம் ஓர் அடிமையைப் போல் படிந்து, பணிந்து வழிக்கு வந்திருந்தாள் அந்த நடிகை. போலீஸார் கொலையின் தடயங்களை அடைய முடியாமல் திணறி இறந்தவனின் கார் டிரைவர், கடற்கரையில் வழக்கமாகச் சுற்றும் சில ரௌடிகள் ஆகியவர்களைப் பிடித்து வைத்து லாக்கப்பில் விசாரிக்கத் தொடங்கியிருந்தனர். திருமலையும், சம்பந்தப்பட்ட இளம் நடிகையும் சந்தேகத்துக்கே உட்படவில்லை. மிகவும் திறமையாகத் தன்னையும் காப்பாற்றிக் கொண்டு அந்த நடிகையையும் காப்பாற்றியிருந்தான் அவன். 'பஞ்சமாபாதகங்கள்' என்று சொல்லுவார்களே. அதில் ஒரு குறைய எல்லாவற்றையுமே தாட்சண்யமும், பயமுமின்றித் தன்னால் உடனே செய்ய முடியும்' என்ற நம்பிக்கை இப்போது அவனுக்கு வந்திருந்தது. தனக்குப் பிடித்தமான அமைச்சரிடம் போட்டி ஆளாக வந்து தொல்லை கொடுத்த இடையூறு தொலைந்தது என்கிற திருப்தியோடு போட்டித் தயாரிப்பாளர், டைரக்டர் ஒருவரைத் தீர்த்துக் கட்டிவிட்டோம் என்ற நிம்மதியும் இருந்தது. என்ன காரணத்தாலோ அந்த ஆளின் கழுத்தை நைலான் கயிற்றால் இறுக்கும் போது எழிலிருப்பு உள்பட்டணம் ஜமீன் வகையறா ஆட்களை நினைத்துக் கொண்டான் திருமலை. வைரம் பாய்ந்த அந்தப் பழைய விரோதத்தை எண்ணியதுமே கொலைக்குச் சங்கல்பம் செய்து கொண்டது போல் ஓர் உறுதி கிடைத்தது. தனது தற்காலிக விரோதிகளைத் தொலைக்கப் போதுமான மன உறுதி பெறுவதற்காக நிரந்தர விரோதிகளை அடிக்கடி நினைக்க வேண்டும் போலிருந்தது அவனுக்கு. வெறுப்பிலும், துவேஷத்திலுமே அவன் வளர்ந்திருந்தான். வெறுப்பிலும், துவேஷத்திலுமே அவனது அரசியல் உருவாயிற்று. வெறுப்பிலும், துவேஷத்திலுமே அவனது வெற்றிகளும், பொருளாதார, புகழ் வசதிகளும் உறுதிப் படுத்தப் பெற்றன. இரு நாளடைவில் அவனை ஒரு 'ஸாடிஸ்ட்' ஆக்கியிருந்தது. பிறரைத் துன்புறுத்தி மகிழவேண்டிய மனநிலைக்கு அவன் வந்திருந்தான். அது தவறில்லை என்று அவனே நம்பினான். அவன் எப்படிப் பட்டவனாக இருந்தாலும் இயக்கமும், அதன் தலைமையும் அவனைக் கைவிடுவதற்கு ஒரு போதும் தயாராயில்லை. அவனது செல்வாக்கு நாளுக்கு நாள் ஓங்கிய படியிருந்தது.

(தொடரும்)

# கவர்ச்சி இல்லாமல் கல்யாணமா?

### காட்சி—1

கல்யாண வீடு. ரிசப்ஷனில் உட்கார்ந்து கொண்டிருந்த மாப்பிள்ளை சுரேஷ் திடீரென்று எழுந்து ஹாலின் நடுவில் வந்து நிற்கிறான். அவனைச் சுற்றிலும் நண்பர்கள் படை கையைத் தூக்கிக் கோஷம் போடுகிறது.

குரல்கள்: முஹூர்த்தம் வேண்டாம்...



சாந்தி முஹூர்த்தம் வேண்டவே வேண்டாம். மாமனார்... டவுன்... டவுன்....

சுரேஷ்: ஏமாற்றாதே... ஏமாற்றாதே....

குரல்கள்: பொய் சொல்லி ஏமாற்றாதே...

சுரேஷ்: சாந்தி முஹூர்த்தம் இங்கே.... இங்கே...

குரல்கள்: கவர்ச்சி நடிகை கோமளா எங்கே? எங்கே...?

(கூட்டத்திலிருந்து சுரேஷின் கையைப் பிடித்துத் தனியே இழுத்து வருகிறார் மாமனார் கோபாலன்.)

கோபாலன்: என்ன மாப்பிள்ளே இது... நீங்க ஆபீஸ்ல பெரிய யூனியனிஸ்ட்டா இருக்கலாம். அதுக்காகக் கல்யாணத்துலயும் வந்து கலாட்டா பண்ணணுமா?

சுரேஷ்: கலாட்டா இல்ல மாமா... இது எங்க உரிமைப் போராட்டம்... உங்க வார்த்தையைக் காப்பாத்தினீங்களா...? யோசனை பண்ணிப் பாருங்க...

கோபாலன்: பேசினபடி சீர்செனத்தி எல்லாமே செஞ்சுட்டேனே மாப்பிளே... வி. ஐ. பி. சூட்கேஸ் விட்டுப்போச்சு.... அதுக்கும் கடைக்கு ஆள் அனுப்பியாச்சு.. இன்னும் என்ன மாப்பிளே?

சுரேஷ்: என் கல்யாணத்துக்குக் கவர்ச்சி நடிகை கோமளா வருவாங்கன்னு சொன்னீங்களே கல்யாணத்துக்கு வரலே. பரவாயில்லே... ரிசப்ஷனுக்கும் வரலியே.

கோபாலன்: அட.... ராமா... அதுக்கு நான் என்ன மாட்டேனா பண்ணுவேன்? ஏதாவது ஷூட்டிங்குன்னு தொலைஞ்சிட்டாளோ என்னவோ... இதைப் போய்ப் பெரிசு பண்றேளே...

சுரேஷ்: முடியாது... மாமா... சோமளா வராம சாந்தி முஹூர்த்தம் நடக்காது.

**கோவை அனுராதா**

கோபாலன்: நீங்க பேசறது ரொம்ப அசிங்கமா இருக்கு மாப்ளே... இனி மாதிரிஎன் பொண்ணு சாரதாவைக் கொடுத்திருக்கேன்...

சுரேஷ்: தப்பா அர்த்தம் பண்ணிக்காதீங்க மாமா... என் பிரண்ட்ஸ் எல்லாம் திருநெல்வேலியில இருந்து வந்திருக்காங்க... எதுக்காக? இந்தக் கல்யாணத்துக்குக் கவர்ச்சி நடிகை கோமளா வருவாங்க... பாக்கலான்னு... ஆசையில... நீங்கதானே சொன்னீங்க... சினிமா உலகமே திரண்டு வரும்னு... தலக்களை கூட வரலே... என்னைக் கேவலப்படுத்திட்டீங்களே மாமா...

கோபாலன்: ஐயோ... நான் எல்லோர் வீட்டுக்கும் போய்ப் பத்திரிகை கொடுக்கத் தான் கொடுத்தேன். என்ன பண்றது? சிரிச்சிக்கிட்டே வரேன்னு சொல்லிக் கழுத்தை அறுத்துட்டாங்க...



சுரேஷ்: அதெல்லாம் முடியாது. அட்லீஸ்ட் கவர்ச்சி நடிகை கோமளாவாவது வந்தால் தான் சாந்தி முகூர்த்தத்திற்கு நான் வருவேன்.

கோபாலன்: (தன் பெண் சாரதாவிடம்) என்னம்மா இது...மாப்பிள்ளை அடம் பிடிக்கிறார். நீ கொஞ்சம் எடுத்துச் சொல்லக் கூடாதா?

சாரதா: அப்பா, இன்னிக்கு நைட் பங்ஷன் நடந்துட்டா அப்புறம் நான் அவரை வழிக்குக் கொண்டுவந்துருவேன்...ஆறு... என் கல்யாணமே கலாட்டாக்கல்யாணமா போச்சே... என் முதல் இரவு...இப்படியா ஆகணும்... (அழுகிறாள்.)

கோபாலன்: நீ வேற கண்ணைத் துடைக்காதம்மா...நான் ஏதாவது வழி இருக்கான்னு பாக்கறேன்.

(அப்போது பையனின் மாமா குறுக்கிட்டு.)

மாமா: மிஸ்டர் கோபாலன், பையன் சொல்றதுலயும் நியாயம் இருக்கு... நீங்க தானே நிச்சயதார்த்தத்தன்னைக்கு சொன்னீங்க...நான் சினிமா கம்பெனில வேலை செய்யறேன்... எல்லா நடிகர்களும் கல்யாணத்துக்கு வருவாங்கன்னு.. அதை நம்பி இத்தனை பேர் வந்துட்டாங்க... அவங்களுக்கு ஏமாத்தமா இருக்காதா?

சுரேஷ்: அதுனலதான் வாங்கற வரதட்சணையில கூட நான் 2,000 கொறைச்சேன்.

கோபாலன்: வாஸ்தவம், வாஸ்தவம்... ஆறு மறை வர்றதும்... சினிமா நடிகர்கள் பங்ஷனுக்கு வர்றதும் அவங்க அவங்க இஷ்டம்... நான் என்ன பண்ண முடியும்? சொல்லுங்க மாப்ளே.

மாமா: அப்படிச் சொல்லிட்டா ஆச்சா... போயி கோமளாவுக்கு போன் பண்ணி நிலைமையை விளக்கிச் சொல்லுங்க சார்...

கோபாலன்: (மனதிற்குள்) எல்லோரையும் தெரியும்னு சொன்னது எவ்வளவு தப்பா போச்சு? என் நிலைமையை விளக்கிச் சொல்லணு மாமே... அவள் எந்த நிலைமையில இருக்காளோ தெரியலையே... லோகு. அப்பா லோகனுதா... ஒரு ஐம்பது பைசா காசு குடு... போன் பண்ணனும்.

லோகு: அப்பா... கல்யாண மண்டப டெலிபோன் அவுட் ஆஃப் ஆர்டர். நான் காலம்பற இருந்து பதினேழு எட்டறுப் போட்டாச்சு... அங்க இருந்து பேசிறு கேக்கறது... இங்கே பேசறது கேக்கலே...

கோபாலன்: ரொம்ப சந்தோஷம். சாஸ்திரிகள் மாமாகிட்ட சொல்லி அந்தடெலிபோனுக்கு மொதல்ல ஒரு சாந்திபண்ணச் சொல்லு... நான் எதிர்த்த பொட்டிச் சடையில ட்ரை பண்ணிப் பாக்கறேன்.

மாப்ளே... அதுவரைக்கும் அமைதியா இருங்க மாப்ளே... எந்த ஒரு முடிவும் எடுத்துராதீங்கோ.. (அப்போது கோபாலனை அவரின் மனைவி வசந்தா பண்ணைச் சிமிட்டிக் கூப்பிடுகிறாள்.)

வசந்தா: என்னு, இங்கே வாங்கோ...

கோபாலன்: என்னடி?

வசந்தா: போன் பண்றதுக்குப் பேசாம ஒரு நடை நேரிலேயே போயிட்டு வந்துருங் கனேன்.

கோபாலன்: போன் பண்ணினு பதிலாவது கிடைக்கும். நேரில போனு கூர்க்கா உள்ளேயே விடமாட்டான்.

வசந்தா: தெரிஞ்சவான்னு சொன்னேளே!

கோபாலன்: வெங்காயம்... எனக்குத் தாண்டி தெரிஞ்சவா. அவளுக்கு நான் தெரிஞ்சவனு இருக்க வேண்டாமா? எப்பவோ பார்த்தது... எழவு. இந்தச் சாந்தி முஹூர்த்தம் முடியட்டும்... உன்னை வந்து பேசிக்கறேன்...

(கோபாலன் பையைத் தூக்கிக் கொண்டு வெளியே ஓடுகிறார்.)

## காட்சி—2

நடிகை கோமளா வீடு.

(போன் மணி ஒலிக்க, அவளின் செகரட்டரி தனகோடி பேசுகிறார்.)

தனகோடி: எஸ்... பி. ஏ. தனகோடி பேசறேன்.

கோபாலன்: அனேக கோடி தண்டங்கள் சார்... சார்... நான் கோபாலன் பேசறேன்.

தனகோடி: கோபாலனு, யாருய்யா...? எந்த கோபாலன்?

கோபாலன்: பத்தமடை பரமசிவத்தோட சீமந்த புத்திரன். ஜெகஜெ பிலிம்ஸ் கம்பெனி டைப்பிஸ்ட்.

தனகோடி: அம்மா இல்லே... ஷூட்டிங் போயிருக்காங்க...

கோபாலன்: சார்... சார்... நான் அவங்க பேன் சார்... நிறைய பாராட்டு விழா வெல்லாம் நடத்தியிருக்கேன்... சமீபத்துல ராஜேஸ்வரி கல்யாணமண்டபத்துல நடந்துதே... பருவ வெறி மங்கை படத்தோட நூறாவது விழா... நான் கூட முப்பத்தி ஐஞ்சாவதா வந்து மாலே போட்டேன். நீங்க என்னைப் பார்த்துச் சிரிச்சீங்களே சார்...

தனகோடி: எத்தனையோ பேரைப் பார்த்துச் சிரிக்கிறோம்... ஞாபகம் வச்சிக்க முடியுமாய்யா...

கோபாலன்: நான் வச்சிருக்கேன் சார்... உங்க புன் சிரிப்புக்குப் பாக்யராஜ் கூட ஈடாக முடியாது. (மனதிற்குள்) தங்கப் பல் தடியா...

தனகோடி: அப்படியா... இருக்கும்... இருக்கும். பாவம், அம்மா நைட் ஷூட்டிங் முடிச்சிட்டுத் தூங்கறாங்களே...ம்...

(அப்போது கோமளா உள்ளேயிருந்து வருகிறாள்.)

கோமளா: என்ன செக்ரட்டரி? ரொம்ப நேரமா போன்ல பேசறீங்க... யாரது?

தனகோடி: யாரோ கோபாலனும்... ரொம்ப அவசரமா உங்க கூட பேசணுமாம்...

கோமளா: நான் பிஸியா இருக்கேன்னு சொல்லிட்டுங்களா?

தனகோடி: சொல்லிட்டேன் மேடம்.... அவருக்கு இது வாழ்க்கைப் பிரச்சினையாம்.

கோமளா: அப்படியா... போனை இப்படிக் கொடுங்க...?

கோமளா: கோமளா ஹியர்... உங்களுக்கு என்ன வேணும்?

கோபாலன்: அம்மா... அம்மா... சாரி. மேடம்... மேடம்... உங்க உதவி இல்லேன்னு என் பொண்ணுக்குக் கல்யாணமே நின்னு போகும் மேடம். நான் உங்க விசிறி.

கோமளா: என்னய்யா இது. டொனேஷன் கேக்கற நேரமா இது? போன்லதான் கேப்பாங்களா?

கோபாலன்: ஐயையோ, டொனேஷன் இல்லே மேடம்... இன்னிக்கு கல்யாணம் நடந்துச்சு. என் மாப்பிள்ளே நீங்க கல்யாணத்துக்கு வந்தால்தான் முதல் இரவுக்குச் சம்மதிப்பேன்னு அடம் பிடிக்கிறாரு. போன மாசம்பத்தாம் தேதி வாஹினி ஸ்டுடியோவுல நீங்க ஒரு வாழை இலை மட்டும் கட்டிக்கிட்டு ஒரு டான்ஸ் ஆடினீங்களே... அப்ப நான் வந்து பத்திரிகை கொடுத்தேனே... அந்தக் கல்யாணம்தான் மேடம்...

கோமளா: வர முடியாதுங்க... நான் வரதுக்குள்ள விடிஞ்சே போயிடும். அப்புறம் எப்படி முதல் இரவு வைப்பீங்க... அந்தச் சடங்கைப் பகல்ல வச்சாலும் நல்லா இருக்காது. ஒண்ணு செய்யுங்க... பொண்ணையும், மாப்பிள்ளையையும் என் வீட்டுக்கு ஒரு கார் வச்சி கூட்டிட்டு வந்திருங்க... நான் ஆசீர்வாதம் பண்ணிடறேன்... ஓ.கே... (போனை வைத்து விடுகிறாள்.)

கோபாலன்: எ ப் ப டி யோ இன்னிக்குக் கோமளா முக தரிசனம் கிடைச்சு...அந்தப் பாடைகள் சமாதானம் ஆனு சரி...

(கல்யாண மண்டபத்திற்குள் ஓடுகிறார்)

## காட்சி—3

(கோபாலன் ஓடி வர அவரை எல்லோரும் சூழ்ந்து கொள்ளுகிறார்கள்.)

சாரதா: என்னப்பா ஆச்சு? மணி 9 ஆச்சப்பா...

கோபாலன்: உன் அவசரம் எனக்கு. ஏற்பாடு பண்ணிட்டேன்ம்மா... அப்பாடா..

(பெருமூச்சு விடுகிறார்.)

சுரேஷ்: என்ன மாமா... நடிகை கோமளாவை நாங்க பார்க்க முடியுமா?

கோபாலன்: முடியும். ஆனா ஒரு சின்ன திருத்தம் மாப்பிளே... அவங்க இங்க வர முடியாதாம். நாம அங்கே போறோம். ஒரு டாக்சி ஏற்பாடு பண்ணறேன்.

சுரேஷ்: நோ... நோ... டாக்சியா? எனக்காக மட்டும் இல்லே மாமா... என் பிரண்ட்ஸ் எல்லாம் கோமளாவைப் பார்க்கணும். அதனால ஒரு லாரியே ஏற்பாடு பண்ணுங்க.

கோபாலன்: லாரியா...? அதுக்கு இப்ப நான் எங்கே மாப்ளே போவேன்... ஆண்டவா... வடபழனி ஆண்டவா...?

சத்திரத்து மானேஜர்: கவலைப்படாதீங்க... வாடகைக்கு பாத்திரம் எடுக்க ஒரு லாரி வந்திருக்கு. அதுல போயிட்டுச் சீக்கிரமா வந்துடுங்க.

கோபாலன்: ஐயா... உங்களுக்கு ரொம்ப நன்றி.

(மாப்பிள்ளையின் கல்லூரித் தோழர்கள் அசிங்கமாக நாட்டியமாட, லாரி கோமளாவின் வீட்டை நோக்கிப் பறக்கிறது)

## காட்சி—4

(கோமளாவின் வீடு. வரவேற்பு அறையில் கூட்டமாக நிற்கிறார்கள். தனகோடி வருகிறார்.)

தனகோடி: பொண்ணும் மாப்பிள்ளையும் மட்டும் இப்படி சோபாவுல உட்காருங்க.. மத்தவங்களெல்லாம் நில்லுங்க... மேடம் வந்துட்டு இருக்காங்க...

(ஆவலுடன் எதிர்பார்த்த கவர்ச்சி நடிகை கோமளா, பச்சைக் கலர் சால்வை ஒன்றைப் போர்த்திக் கொண்டு அடக்க ஒடுக்கமாக வந்து 'வணக்கம் சொல்கிறாள்.)

குரல்கள்: (ஆர்வம் இழந்து குரலை இறங்கி) கோமளா வாழ்க... கவர்ச்சி வா...ழ்...க.

கோமளா: வணக்கம். உங்களையெல்லாம் பார்க்க எனக்கு மகிழ்ச்சியா இருக்குது.

ஒருத்தி: '''ஜோக்' எழுத்தாளரைக் கட்டிக் கொண்டது - தப்பாய்ப் போச்சுடி.''

மற்றவள்: ''ஏன்...?''

ஒருத்தி: ''மாவாட்டச் சொன்னால், அரைத்த மாவைத் தான் அரைப்பேன் என்று கூறுகிறாரே!''

தேனி. எஸ். மாரியப்பன்.



நான் சின்னப் பொண்ணு. இருந்தாலும் வீடு தேடி வந்ததுனால மணமக்களை வாழ்த்தறேன். இந்த மகிழ்ச்சியான வேளையில ஒண்ணு தெரிவிச்சுக்கறேன். கண்ட கிசுகிசுவெல்லாம் நம்பாதீங்க. நான் கல்யாணமே பண்ணிக்கப்போறது இல்லே... நீங்க விரும்பற வரைக்கும்... ஏன் என் கடைசி மூச்சு வரைக்கும் கூடக் கவர்ச்சி நடனம் ஆடிக்கிட்டே போகத் தான் பிரியப்படறேன்...''

குரல்கள்: (கைத்தட்டலுடன்) கவர்ச்சி வாழ்க... கலை வாழ்க... கோமளா வாழ்க...

தனகோடி: சரி... சரி... தட்டினது போதும் புறப்படுங்க... மேடம் ரெஸ்ட் எடுக்கணும். (கழுத்தைப் பிடித்துத் தள்ளாத குறையாக ஒவ்வொருத்தராக வெளியே அனுப்புகிறார்.)

## காட்சி—5

(லாரியின் பின்னால் கூட்டம் ஏறிக் கொள்ள, த்ரீ இன் ஒன் கேபினில், கோபாலன், சுரேஷ், சாரதா ஆகியோர் உட்காருகின்றனர். மண்டபம் நோக்கிப் புறப்படும் லாரிக்குள்...) •

கோபாலன்: என்ன மாப்ளே... ரொம்ப டல்லா இருக்கீங்க... உங்க ஆசைப்படியே கோமளாவைத்தான் பார்த்தாச்சே?

சுரேஷ்: மாமா... உங்களை ரொம்பவும் தொல்லை கொடுத்துட்டேன். இந்தக் கோமளாவை ஏண்டாப் பார்த்தோம்னு இருக்கு.

கோபாலன்: ஏன் மாப்ளே?

சுரேஷ்: ரிசப்ஷன் ஹால்ல அவங்க அம்மாவோட பெரிய படம் மாட்டிருந்தது பார்த்தீங்களா? அது வேற யாரும் இல்லே... பாளையங்கோட்டையிலே பத்து வருஷத்துக்கு முன்னால எங்க வீட்டுலே பால் ஊத்திட்டு இருந்த பால்கார பொன்னம்மாதான்.

கோபாலன்: அப்படின்னா... அந்தப் பொன்னம்மாவோட பொண்ணுதான் இந்த கோமளான்னு சொல்றீங்களா?

சுரேஷ்: ஆமா மாமா... எங்க வீட்டுப் பால்காரியைப் பார்க்க நான் இவ்வளவு கலாட்டா பண்ணினதை நினைச்சா வெக்கமா இருக்கு...

கோபாலன்: பால்காரியோ, தயிர்க்காரியோ அவளுக்கு இப்போ பாபுலாரிட்டி இருக்கு. அதுதானே முக்கியம்...

சுரேஷ்: நேரில பார்க்கும் போது கோமளாவை விட என் சாரதா கவர்ச்சியா இருக்கா மாமா... (சாரதாவின் கையை சுரேஷ் பிடிக்க)

கோபாலன்: (கூச்சத்துடன்) மாப்ளே.... மண்டபம் வந்துடட்டும்... அங்கதானே நைட் பங்ஷன் அரேஞ்ச் பண்ணியிருக்கேன்...

(இவர்கள் சிரிக்க, வெளியே லாரியில்...)

குரல்கள்: கோமளா வாழ்க... கவர்ச்சி வாழ்க...

வைக்கப்பட்டிருந்த சடலத்தைக் கண்டதும், துக்கத்தில் முகம் சிவக்க...

அவன் பார்த்துக் கொண்டிருந்த போதே— அறைக் கதவு வேகமாய்த் திறக்கப்படுகிறது.

தோளில் தூங்கும் சின்னக்கண்ணனைப் படுக்க வைப்பதற்காக உள்ளே வந்த உமா—

அதிர்ச்சியில் அலற வாய் திறந்தவள்—

'கப்'பென வாயைப் பொத்திக் கொள்கிறாள்.

(தொடரும்

## 28

எங்கே, உமா தன்னையும் மீறி அலறி விடுவாளோ என்கிற பயத்தில், அவளது இதழ்களை அழுத்திப் பொத்துகிறான் ராஜா.

''கத்தாதே... கத்தாதே உமா ப்ளீஸ்''

''ஐயோ — நீங்க எங்கே... எப்படி வந்தீங்க...''

''பேச நேரமில்லே உமா... விஜி... விஜிக்கு என்ன ஆச்சு உமா?''

கேட்கும் பொழுதே துக்கம் தொண்டையில் முள்ளாய் உறுத்துகிறது அவனுக்கு...

எப்பேர்ப்பட்ட ஜீவனிதி அவள்... உமாவை விடவும் அவனைப் பற்றி முழுசாய்த் தெரிந்து வைத்திருந்த ஒரே ஜீவன்...

உமா, தோளில் தூங்கிக் கொண்டிருந்த குழந்தையைப் படுக்கையில் கொண்டு விட, ராஜா அறைக் கதவை மெதுவாகத் தாழிட...

கதவின் மீதே சாய்ந்து நின்றவனின் மார்பில் முகத்தைப் பதித்துக் கொண்டு, குலுங்கிக் குலுங்கி அழத் தொடங்குகிறாள் உமா...

எதற்காக அழுகிறாள்...

இத்தனை நாள் பிரிவில் அடக்கி வைத்திருந்த துக்கத்தினால் உண்டான அழுகையா...

அல்லது—

இவனைக் கண்ணாரக் காண விஜி இல்லையே என்கிற ஆதங்கத்தினால் உண்டான அழுகையா...

ராஜா, பொங்கி வரும் அழுகையை உதட்டைக் கடித்து, தனக்குள் அடக்க முயற்சி செய்கிறான்... அப்படியும் கண்கள் சிவந்து, குளம் கட்ட, நெற்றி நரம்புகள் புடைக்க...

''என்னங்க...என்னங்க... இப்ப வந்து நிக்கறீங்களே... அந்தப் பொண்ணு கண்ணை மூடறதுக்கு முந்தி — ஆஸ்பத்திரியிலே உசிருக்கு மன்றாடிட்டு இருந்தாளே... அப்ப வந்திருக்கக் கூடாதா... உங்களைப் பார்த்த சந்தோஷத்தோடவாவது கண்ணை மூடியிருப்பாளே...''

''எனக்கு விஷயம் எதுவுமே தெரியாது உமா... விஜிக்கு என்ன ஆச்சு...?''

அவன் உமாவின் தோளைப் பிடித்து உலுக்க... அவள் விம்மலும் விசும்பலுமாய் நடந்ததைச் சொல்ல...

அதிர்ச்சியில் ஸ்தம்பித்து நிற்கிறான் ராஜா.

'விஜி — தன்னைக் காதலித்தாளா...'

'என்னையே நினைத்து, அவள் தனக்குத் தானே தாலி கட்டிக் கொண்டாளா...?'

'ஐயோ... குழந்தை மாதிரி வளைய வந்தவளின் நெஞ்சுக்குள் இத்தனை சோகச் சுமைகளா...?'

'எனக்காக அடி வாங்கி உயிரை விட்டாளா...'

அவன், முகத்தில் குமுபிய உணர்ச்சிகளை அடக்க மாட்டாதவனாய், இரு கைகளாலும் முகத்தை மூடிக் கொண்டு அழுகிறான்.

உமாவோ, பயத்தில் படபடக்கிறாள்.

''இங்கே நீங்க இருக்கிற ஒவ்வொரு விநாடியும் உங்களுக்கு ஆபத்துதான்... சீக்கிரம் கிளம்புங்க...''

''அது எப்படி உமா... விஜியை நான் ஒரு தடவையாவது பார்த்துட்டுப் போயிடறேன்.''

''கீழே மாமா இருக்கார். வீட்டைச் சுத்தி போலீஸ் இருக்கு... உங்களைக் காட்டிக் கொடுக்க விருப்பமில்லாமத்தான் விஜி செத்தா... இப்ப, நீங்களே வலுவிலே போய்ச் சிக்கினா — அவ, அடி வாங்கி உயிரை விட்டதுக்கே அர்த்தமில்லாமப் போயிடாதா...?''

''எனக்காக ஒரு அப்பாவி தன்னுயிரையே விட்டிருக்கா... நான் ஆம்பிளைன்னு சொல்லிக்கவே வெட்கப்படறேன். இனி மேலும் நான் ஒளிஞ்சு, ஒளிஞ்சு எதுக்காக வாழணும்?...''

அவன் இதைச் சொல்லி முடிக்கும் முன்பே, தனது தளிர்க் கரத்தால், அவனது வாயைப் பொத்துகிறாள் உமா... பார்வையில் பரிதாபகரமான கெஞ்சல்...

''சட்டத்தைப் பத்தி — இந்த வீட்டு மருமகளான எனக்கு நல்லாவே தெரியும்... நீங்க பிடிபட்டா — உங்களைத் தூக்குல ஏத்திடுத்தான் மறுவேலைன்னு கங்கணம் கட்டிட்டு நிறைய பேர் காத்துட்டிருக்காங்க. இந்தக் கொலை — திட்டமிட்டுச் செய்யப்பட்டது நான்னு உங்களுக்கு எதிரா சொல்ல சாட்சிங்க பலபேரைத் தயார் பண்ணிட்டாங்க...''

# சொல் ஒன்று வேண்டும்

அனுராதா ரமணன்

''இது எதுவுமே — எனக்காக கோர்ட் படி ஏறப் போற ஒரு சாட்சிக்கு முன்னாலே நிக்க முடியாது உமா...''

''யார் அது?''

''அது... அது வந்து... இப்ப சொல்ல முடியாது உமா...''

''ஏன்?''

''இந்தக் கொலையைக் கண்ணாலப்பார்த்த ஒரே சாட்சி அவங்கதான்... பார்க்கப் போனா — இந்தச் சாட்சியைக் காப்பாத்தப் போய்த்தான், நான் மௌனமைக் கொல்றும் படியா ஆச்சு...''

''அப்படியொரு நன்மையைச் செஞ்சிருக்கிற உங்களுக்காக அவங்க சாட்சி சொல்ல வரக் கூடாதா...?''

''வருவாங்க... சண்டிப்பா வருவாங்க. ஆனா இப்ப இல்லே... இன்னும் கொஞ்ச நாள் போகணும். அவங்களோட ஒரு வார்த்தைக்காகத்தான்... நான் அஞ்ஞாத வாசம் பண்ணிட்டிருக்கேன்.''

''அப்ப, இப்பவும் இப்படியே ஒளிம்பிடுங்க...''

''நான் விஜியைப் பார்க்கணும் உமா...''

''உங்க மனசு படற பாடு எனக்குப் புரியுது. பார்க்கப் போனா — அவளுக்கு உங்க கையாலே கொள்ளி போடணும்... அதை விடவும் அவ ஆத்மாவுக்குத் திருப்தியான



விஷயம் வேறு எதுவுமே இருக்க முடியாது. பின்னே கைக் கொள்ளியை விட, புருஷன் கைக் கொள்ளியைத்தான் பொண்ணுங்க விரும்புவாங்க...''

''......''

''ஆனா, நடுக் கூடத்துல இருக்கற சடலத்தை எப்படி நீங்க வந்து, போர்வையை விலக்கிப் பார்க்க முடியும்?..''

கதவில் சாய்ந்தபடியே கண்களை மூடி, ஒரு கணம் யோசித்த ராஜா — அவளை அருகில் அழைத்துக் காதோடு சொல்கிறான்...

''நீ கீழே போய் — அவ முகத்துல மூடியிருக்கிற துணியைக் கொஞ்சம் நகர்த்து உமா... நான் இங்கேயிருந்தே பார்த்துட்டுப் போயிடறேன்...''

''ஐயோ, நீங்க இங்கே நிக்கறதை யாராவது பார்த்துட்டாங்கன்னா...''

''அதைப் பத்திக் கவலைப்படாதே. நான் பார்த்துக்கறேன்.''

அவன் எத்தனையோ சொன்ன பின், அவள் தயங்கித் தயங்கிக் கிளம்புகிறாள்.

''இதப்பாரு. நான் எங்கேயிருந்து பார்க்கறேன்னு பார்வையை அலைய விடக்கூடாதே... அதுதான் ஆபத்து... நீ பாட்டுக்குப் போ...''

அவள், தலையசைத்தபடி, மாடிப் படிகளில் இறங்குகிறாள்...

விஜியின் சடலத்தை நெருங்க நெருங்க, நெஞ்சு திம் திம்மென அதிர்ந்தது அவளுக்கு.

ஒரு விநாடி நின்று, தலையோடு கால் போர்த்தியிருக்க போர்வையையே உற்றுப் பார்த்தவள், தலைப் பக்கத்துப் போர்வையை மெள்ள நகர்த்த—

''உமா.''

இதயமே ஒரு கணம் நின்று விட்டாற் போல...

''ஆங்...?''

நெஞ்சை, ஒரு கையால் பிடித்தபடி திரும்புகிறாள்.

அங்கே—

இரு கைகளையும் கட்டியபடி பரந்தாமன்..

பனிக்கட்டிகளின் பக்கத்தில் நின்றும் — உமாவின் உச்சந்தலையிலிருந்து வெந்நீர் ஊற்று கொப்புளிப்பது போன்ற உணர்ச்சி...

''என்னம்மா... இங்கே வந்து...''

''ஒண்ணுமில்லே... காலையிலே எடுத்துட்டுப் போயிடப் போறாங்க... அதுக்குள்ள பார்க்க முடிஞ்ச அளவுக்குப் பார்த்துடலாமேன்னு...''

ஏதோ, சொல்லிச் சமாளிக்க வேண்டும் என்கிற நினைப்பில் தான், உமா, இதைச் சொன்னாள் என்றாலும்... இதைச் சொல்லும் பொழுதே, கண்கள் மடை திறந்து கொள்கிறது...

பரந்தாமனின் கன்னத்துச் சதை கூட, மழைக் காலத்து சதுப்பு நிலம் போல — கண்ணீரில் நெகிழ்ந்திருக்க...

அவர், உமாவின் அருகில் வந்து நின்றபடி விஜியின் முகத்தையே வைத்த கண் வாங்காமல் பார்க்கிறார்...

எத்தனை நேரம் தான் அப்படியே நின்று கொண்டிருந்தாரோ...

''மாமா...''

உமாவின் குரல்தான், அவரை உலுக்குகிறது...

''உம்?''

''போய்ப் படுங்க...''

''எனக்கு இனிமே ஒரே படுக்கைதாம்மா. ஆசையும் பாசமுமா வளர்த்த கிளியை, நானே கழுத்தை முறிச்சுப் போட்டுட்டேன்... இனிமே எனக்கு ஏது தூக்கம்?''

அவர், அது நேரம் வரையில் அடக்கி வைத்திருந்த துக்கமெல்லாம், குரலில் தெறிக்க — பெரிசாய் வாய் விட்டு அழ...

''என்னங்க... என்னங்க இது...?''

மீனாட்சி, பதைத்துப் போய் ஓடி வருகிறாள்.

எத்தனைதான் கணவனின் செய்கையினால் மனசுக்குள் வெறுப்பு படர்ந்திருந்தாலும்... அவர், அழுகிற போது தாங்க முடியவில்லையே...

''எழுந்து வாங்க — எல்லாம் காலையிலப் பார்த்துக்கலாம்...''

''இல்லே மீனா... நான் இங்கேயே, என் குழந்தை பக்கத்துலப் படுத்துக்கறேன்... என்னை விடு...''

''இப்ப நீங்க உள்ளே வரப் போறீங்களா இல்லையா...?''

மீனாட்சி, அவரது கையைப் பிடித்து இழுக்காத குறையாக இழுத்துப் போய், படுக்கையில் படுக்கச் சொல்லி, இரண்டு தூக்க மாத்திரைகளை எடுத்து அவரது வாயில் போடுகிறாள்.

''முழுங்கிட்டுப் படுங்க...''

''தூக்கம் வராது மீனா...''

''வருதோ இல்லையோ, கொஞ்சநேரம் கண்ணை மூடிட்டுப் படுங்க...''

''விஜி பக்கத்துல யாரு படுக்கப் போறாங்க...?''

''நானும் உமாவும் இருக்கோம்...''

அவள், அதற்கு மேல் நிற்காமல் வெளியேறி, அறைக் கதவை, வெளிப்புறமாய்த் தாழிட்டு விட்டு வர...

உமா, இறந்து கிடந்த விஜியின் முகத்தை இழுத்துப் போர்த்த...

''நீ வேணுமானா மாடிக்குப் போ உமா. குழந்தை பாதித் தூக்கத்துல எழுந்து கத்தப் போறான்...''

மீனாட்சி சொன்னதும் தான் உமாவுக்கு, குழந்தையின் நினைப்பே வருகிறது...

'குழந்தை முகத்தைக் கூட அவர் பார்க்கல்லையே...'

அவள் பரபரப்புடன் மாடியேறி, தனது அறைக்குள் சென்று பார்க்கிறாள்...

அங்கே ராஜாவைக் காணோம்...

'எங்கே போயிருப்பார்...?'

அவள், மாடி முழுவதும், சல்லடை போட்டுச் சலிக்காத குறையாகத் தேட...

'எங்கே போனார்...?'

அவனைக் காணாத துயரத்தில், விழிகளில் வற்றாது கசிந்த கண்ணீரைத் துடைக்கவும் மறந்து — அவள் — குழந்தையை இறுக அணைத்தபடி படுக்க...

விடிகாலைப் பொழுது வரையில் தூக்கமும் இல்லாமல், விழிப்புமில்லாத அவஸ்தையில்

---

இடத்தலைவை மீனாட்சியின் குரல்தான் எழுப்புகிறது...

"உமா... குழந்தையைக் கொண்டா... அவன் கையாலே நெருப்பு வாங்கணும்னு அய்யர் சொல்றாரு..."

உமா, குழந்தையுடன் இறங்கி வருகிறாள்.

நடுக்கூடத்தில் போர்த்தப்பட்ட நிலையில் விஜியின் சடலம் தனது கடைசிக் குளியலுக்காகக் காத்திருக்கிறது...

பரந்தாமன் கைகட்டி நிற்க...

"மளமளன்னு தண்ணியக் கொட்டுங்கோ அம்மா... மஞ்சளையும் குங்குமத்தையும் உங்க மருமகள் நெத்தியில இடுங்கோ... பூச்சரம் இருந்தா தலையில வைங்கோ... மாலை எங்கே...?"

வைதிகரின் குரல் கணீரென ஒலிக்க— எத்திராஜ் கையில் பிரமாண்டமானதொரு ரோஜாப்பூ மாலையுடன் நிற்க...

மீனாட்சி, சடலத்தை மூடியிருந்த போர்வையை விலக்க...

"ஆ!"

கூடியிருந்த அத்தனை பேரும் இரைந்து கூச்சலிடுகின்றனர்.

உமாவின் விழிகளில் பயம் கலந்த அதிர்ச்சி.

பரந்தாமன், விழிகளே தெறித்து விழுந்து விடுவது போலப் பார்க்கிறார்...

அங்கே...

விஜயின் சடலத்துக்குப் பதிலாக... இரண்டு தலையணைகள் — தலை, இடுப்பு பிரதேசங்களுக்குத் தகுந்த படி உருட்டி, அமுக்கி வைக்கப்பட்டிருந்தது.

விஜி...

எங்கே போனாள்...

உயிர் பிரிந்த சடலத்தை யார் கடத்திக் கொண்டு போயிருக்க முடியும்?

உமா — தலையை இரு கைகளாலும் பிடித்தபடி மயங்கி விழுகிறாள்.

(தொடரும்)

# வேண்டாமே இந்தப் பார்வை!

விமலா ரமணி

**பா**ர்வதி அம்மாளுக்கு இன்று கண்கட்டை அவிழ்க்கும் நாள்.

—கண் ஆபரேஷன் நல்லபடியாக முடிந்து இன்றுதான் கண் கட்டை அவிழ்க்கப் போகிறார்கள். இப்படிக் கண் இல்லாமல் அவள் வாழ ஆரம்பித்துப் பல வருடங்கள் ஆகிவிட்டன.

ஆமாம், ஒரு கண் பார்வை போனது கூட ஒரு சிறிய கதைதான் — பார்வதிக்குப் பத்துப் பதினைந்து வயதாக இருந்தபோது வீட்டில் குழந்தைகள் பாசி மணிகளைக் கல்லால் உடைத்துக் கொண்டு விளையாட, பக்கத்தில் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த பார்வதியின் கண்களைப் பாசி மணித் துண்டு ஒன்று தாக்க... வலது கண்ணிலிருந்து ரத்தம் தாரை தாரையாகக் கொட்ட, ஆஸ்பத்திரி, மருந்து என்று ஆறு மாதங்கள் அல்லாடிய பிறகு வலது கண் பார்வை நிரந்தரமாகப் போய் விட்ட உண்மை தெரிந்தது.

இப்போது இருப்பது இடது கண் பார்வை ஒன்றுதான்.

மெல்ல மெல்ல அந்த ஒற்றைக் கண் பார்வையும் மங்கி....மங்கி அதுவும் ஒரேயடியாகப் புகைப் படலமாக மாறிப்போன போதுதான் பார்வதி பயந்து போய் விட்டாள் நிஜமாகவே. அந்த பயத்தைப் போக்கினாள் பேத்தி ரேவதி.

ரேவதியைப் பாட்டி பார்வதிதான் வளர்த்துப் பெரியவள் ஆக்கினாள். அந்த நன்றிக்காக ரேவதி தன் அருகிலேயே பாட்டியை வைத்துக் கொண்டாள்.

தட்டில் சாதமும் கறியும் ஒரு புறம் இருக்கக் காலியான இடத்தில் பாட்டி தடவிக் கொண்டிருப்பாள்.

ரேவதிக்குப் பார்க்கப் பாவமாக இருக்கும்.

''நானே கையிலே சாப்பாடு போட்டுடறேன் பாட்டி'' என்று இதமாகக் கூறிப் பார்வதியின் கைகளில் சாதத்தைப் பிசைந்து போடுவாள். முன்பு எல்லாம் நிறையப் புஸ்தகம் படிப்பாள் பார்வதி. இருக்கிற ஒற்றைக் கண் பார்வையை 'ஸ்ட்ரெயின்' செய்து கொண்டு நிறைய நிறைய நாவல்கள் கதைகள் எல்லாம் படிப்பாள்.

பெரிய எழுத்து விக்கிரமாதித்தன் கதையிலிருந்து அல்லி அரசாணி மாலையிலிருந்து 'கல்கி'யின் சிவகாமி சபதம், பொன்னியின் செல்வன், 'லட்சுமி'யின் குடும்ப நாவல்கள் எல்லாவற்றையும் நிறைய நிறையப் படித்திருக்கிறாள் பார்வதி.

இப்போது எப்படிப் படிப்பது?

அந்தக் குறையையும் ரேவதி தீர்த்து வைப்பாள்.

கல்லூரியிலிருந்து வீடு திரும்பியவுடன் தினம் ஒரு மணி நேரம் பாட்டிக்கு பேப்பர் படித்துக் காட்டுவாள். ராமகிருஷ்ணர் உபதேசங்கள், பக்தி நூல்கள் படித்துக் காட்டுவாள்.

இப்படி இருக்கும்போதுதான் ஒரு நாள் பாட்டி கேட்டாள்: ''ரேவதி... முந்தி எல்லாம் நிறைய நாவல்படிப்பேன். இப்பவும் பத்திரிகையிலே நாவல் வருமே அதைப் படிச்சுக் காட்டேன்.''

''ஆகட்டும் பாட்டி'' என்பாள் ரேவதி.

ஆனால் அவள் படித்துக் காட்டியதெல்லாம்—

பழைய காலப் புத்தகங்கள், நாவல்கள், பக்திச் சொற்பொழிவுகள்...

கண் ஆபரேஷன் இரண்டு முறை நடக்க இருந்து தள்ளிப் போடப்பட்டது. காரணம்?

பார்வதிக்கு ப்ளட் ஷுகர் இருந்தது. முதலில் சர்க்கரை வியாதியைக்கட்டுப்படுத்தி விட்டுத்தான் கண் ஆபரேஷன் என்று டாக்டர்கள் சொல்லி விட்டார்கள்.

இன்சுலின், மருந்து மாத்திரைகள், பிரஷர் குறைக்க வேறு மாத்திரைகள் என்று பார்வதி மாத்திரையில் வாழ ஆரம்பித்து ஒன்றல்ல இரண்டல்ல கிட்டத்தட்ட பத்து வருடங்கள் ஆகிவிட்டன. ரேவதியும் மேலே மேலே படிப்பு, ரிசர்ச் என்று அப்

## அபாய அறிவிப்பு

உலகில் உள்ள வெப்ப மண்டலக் காடுகள் நிமிடத்திற்கு 3 ஹெக்டேர் வீதம் — அதாவது வருடத்திற்கு 2கோடி ஹெக்டேர் வீதம் அழிந்து வருகின்றன.

● சஹாரா பாலைவனம் ஆண்டுதோறும் ஒரு லட்சம் ஹெக்டேர் வீதம் தெற்கு நோக்கிப் பரவிக் கொண்டு வருகிறது.

● ஆண்டுதோறும் கடலில் 3 கோடி டன் எண்ணெய் கலந்து கடல் வாழ் உயிர்களைக் கொல்கிறதுஎன நிபுணர்கள் எச்சரித்துள்ளனர்.

—ஞான தங்க பாரதி
(ஆதாரம்: சோவியத் சிறப்புக்கட்டுரை)



படியே போய்க் கொண்டிருந்ததால் கல்யாணமே செய்து கொள்ளவில்லை.

பார்வதி கேட்டால்—

''என்ன பாட்டி எனக்கு இருபத்தி அஞ்சுதானே ஆறது? உனக்கு ஆபரேஷன் ஆகிப் பார்வை வரட்டும். அப்புறமா நான் கல்யாணம் பண்ணிக்கறேன். நீ உன் பேத்தியோட புருஷனைப் பார்க்க வேண்டாமா?'' என்று சிரித்தே மழுப்பி விடுவாள்.

பார்வதியின் ஷுகர் குறைந்து பிரஷர் குறைந்து ஒரு வழியாய் ஆபரேஷன் ஆகி... இதோ... இதோ கண் கட்டை அவிழ்க்கப் போகிறார்கள். பார்வதியின் மனசு சந்தோஷத்தில் குதூகலிக்கிறது.

சின்னச் சின்ன மலர்ச்சிகளால் இதயம் நிரம்பி இருக்கிறது.

முதலில் ரேவதியைப் பார்க்க வேண்டும்.

பாவாடை தாவணி போட்ட பெண்ணாக அவளைப் பார்த்தது. இந்தப் பத்து வருடத்தில் எப்படி வளர்ந்திருப்பாள்?

அவள் பேச்சுக்களில் இருக்கிற முதிர்ச்சி அவள் முகத்திலும் வந்திருக்குமோ? கண் பார்வை வந்த முதல் காரியமாய் ரேவதிக்கு மாப்பிள்ளை தேட வேண்டும். அப்புறம்?...

ஆ.... கண்ணாடியை மாட்டிக் கொண்டு புத்தகங்களைக் கட்டுக் கட்டாக எடுத்து வைத்துக் கொண்டு படிக்க வேண்டும்... படிக்க வேண்டும்.... ஓயாமல் படிக்க வேண்டும்.

படிக்க வேண்டும் என்கிற 'தாகம்' தீரு மட்டும் படிக்க வேண்டும்

''எனக்குக் கண் தெரியுது... கண் தெரியுது....'' பார்வதி கூவினாள்.

''பாட்டி ''

ரேவதி பாட்டியைக் கட்டிக்



கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தாள்.

• • •

ஆயிற்று. ஒரு மாத ஆஸ்பத்திரி வாசத்துக்குப் பின் நன்றாக ஓய்வு எடுத்துக்கொண்டு வீடு திரும்பி ஆகி விட்டது.

பாட்டிக்கு 'போர்' அடித்தது.

ஒரு மாதத்துக்கு மேலாகி விட்டதே. ஏதாவது புத்தகம் படித்தால் என்ன? — பார்வதி கண்ணாடியை மாட்டிக் கொண்டாள்.

மெல்ல அலுங்காமல் எழுந்து ரேவதியின் அறையை நோக்கிப் போனாள். மேஜை நிறையப் புத்தகங்கள்... புதுப் புதுப் பத்திரிகைகள்... ஒரு கணம் மெய் மறந்து நின்ற பார்வதி மெதுவாக ஒரு புத்தகத்தை எடுத்தாள். புரட்டினாள்.

ஐயய்யோ... இதென்ன... இவைகள் பத்திரிகைகளா? படிக்கும் புத்தகங்கள்தானா?

ஆபாசமான படங்கள்... அத்தனையும் மிக மோசமான படங்கள்... படிக்க வேண்டிய பத்திரிகைகளிலா இந்த மாதிரிப் படங்கள்.... அங்கொன்றும் இங்கொன்றுமாய்ப் பார்வதி படிக்கிறாள். ஐயய்யோ... இதென்ன பச்சை பச்சையாய் வர்ணனைகள் பெண்களின் அந்தரங்க நிலை விமரிசனங்கள். இவர்கள் எழுத்தாளர்களா? கடவுளே... இதை... இதையெல்லாமா ரேவதி படிக்கிறாள்?

கடவுளே.... எனக்கு ஏன் கண் பார்வை வந்தது? நான் குருடியாகவே இருந்திருக்கக் கூடாதா?

காலடி ஓசை கேட்கிறது.

பார்வதி கோபமாகத் திரும்பியபோது ரேவதி அமைதியாக உள்ளே நுழைந்துகொண்டிருந்தாள்.

''என்ன பாட்டி இது வீணா இப்ப ஸ்ட்ரெயின் பண்ணிக்காதேன்னு சொன்னா கேட்காம இங்கே வந்து என்ன குடைஞ்சுக்கிட்டு இருக்கே?''

''என்னைக் கேள்வி கேட்கிறது இருக்கட்டும்.... இதுக்குப் பதில் சொல்லு. இந்தக் குப்பைகளை யெல்லாம் படிக்கிறியா?''

''ஆமாம்.... ஏன்?'' — ரேவதி சிரித்தபடி சொல்கிறாள்.

''நல்லாத்தான் இருக்கு. அந்தக் காலத்து ராஜாஜி கதைகளுக்கும் கல்கி கதைகளுக்கும் இது ஈடாகுமா? இதை யெல்லாம் கொளுத்தணும்.''

''இப்ப எல்லாம் இப்படிப்பட்ட கதைகளைத்தான் பாட்டி ஜனங்க 'லைக்' பண்றாங்க.''

''குப்பைத் தொட்டியிலே தூக்கிப் போடு. படுக்கை ரூமிலே பாடியை அவிழ்க்கிறதும், குளிக்கிற ரூமிலே எட்டிப் பார்க்கிறதும்தான் கதையா?''

''பாட்டி... ஒருத்தனுக்குத் தாகம் எடுக்கிறது. அந்தத் தாகத்தை ஒருத்தன் தண்ணீர் குடிச்சும் தீர்த்துக்கலாம். இன்னொருத்தன் சோடாக் குடிச்சும் தீர்த்துக்கலாம். இல்லையா? பால் சாப்பிடலாம். இல்லே சாராயமும் குடிக்கலாம். தாகங்கிற உணர்வு ஒண்ணுதான். அதைத் தீர்த்துக்கிற விதம் தான் வித்தியாசப் படுது. உன் காலத்திலே காவேரித் தண்ணீரைக் குடிச்சுத் தாகத்தைத் தீர்த்துட்டீங்க. இப்போ கலப்படத் தண்ணி தேவைப்படுது. வாசகனுடைய தாகத்துக்கு வித விதமான பானங்கள். அவ்வளவுதான்.''

''அதுக்காகச் சாராயம் குடிச்சுத் தாகத்தைத் தீர்த்துக்கிட்டா குடல் வெந்துபோகும். கங்கை இருக்கச் சாக்கடையிலே குளிக்கலாமா?''

''சாக்கடை நாத்தமெடுத்து ஓடும்போதுதான் கங்கையோட பெருமையும் புனிதமும் தெரியும். இப்போ இலக்கியங்களிலே சலப்படம் இருக்கு. கங்கை இருக்கு. சாக்கடையும் இருக்கு. இதை எல்லாம் 'தரம்' பிரிக்கிற வேலை வாசகனுக்கு இருக்கு. உன் காலத்திலே எல்லாமே புனிதமாக இருந்தது. உங்களுக்கு அதிக வேலை எல்லாம் இல்லே. எல்லாத்தையும் படிச்சீங்க. ஆனா இப்போ தேர்ந்தெடுக்க வேண்டிய அவசியம் வாசகனுக்கு இருக்கு. இதுவும் நல்லதுதான் பாட்டி. முந்தி நான் குழந்தையா இருக்கிறப்போ ஆண் பிள்ளைகளோடு விளையாடினா காதறுந்து போயிடும்னு சொல்லுவே. அதைக் கேட்டுப் பயந்துட்டு ஆண்களோடு விளையாடாமே நாங்க இருந்தோம். இப்போ காலம் அப்படி இல்லே பாட்டி. எதைச் சொன்னாலும் குழந்தைங்க காரண காரியம் கேட்

---



ஞாபக மறதியால் மாத்திரைகள் இருக்கும் இடம் தெரியாமல் நோயாளிகள் அலைவதைத் தடுக்கவும், நேரம் தவறாமல் மருந்து சாப்பிடவும் உதவ ஒரு கடிகாரம் தயாரித்துள்ளார் மேற்குஜெர்மானிய டாக்டர் மாரீஸ் பிஷ்பெய்ன்.

இந்தக் கடிகாரத்தில் மாத்திரைகளை அதற்கென உள்ள சிறிய அறையில் வைத்துவிட்டு சாவியும் கொடுத்துவிட வேண்டும். மாத்திரை சாப்பிட வேண்டிய நேரத்தை 'செட்' செய்து கொள்ளலாம். குறிப்பிட்ட நேரம் வந்ததும் கடிகாரம் டார்ச் லைட்டைப் போல் ஒளி பாய்ச்சும். அலாரமும் அலறும். கடிகாரத்தில் உள்ள மருந்துப் பெட்டியைத் திறந்து மாத்திரையை எடுத்துவிட்டு அதை மூடும் வரை அலாரம் அடித்துக்கொண்டே இருக்கும்.

—ஆர். எஸ். சுப்ரமணியன்

கருங்க. குழந்தைகளோட அறிவு வளர்ச்சி முன்னே விட இப்போ இன்னும் அதிகமா இருக்கு. சட்டுன்னு அவங்க எதுனாலேயும் பாதிக்கப்படறதில்லே. முந்தி யெல்லாம் அப்பன் தப்புப் பண்ணுவான். ஆனா பிள்ளை தப்புப் பண்ணினா தன் தப்பை மறைச்சு வைச்சுப் பிள்ளையை அடிப்பான், கண்டிப்பான். இப்போ அப்பன் தப்புப் பண்ணினா, புள்ளைங்க அப்பனையே கேள்வி கேக்கறாங்க. நல்லது கெட்டதைத் தேர்ந்தெடுக்கிற ஞானம் இவங்களுக்கு இருக்கு. எல்லாம் வெட்ட வெளிச்சமா இருக்கிறதால எல்லாத்தையும் பார்த்துத் தனக்கு வேணும்கிறதைத் தேர்ந்தெடுக்கிறாங்க... சில நேரங்களிலே சில கணிப்புக்கள் தப்பறதும் உண்டு. ஆனா அது ரொம்ப சொற்பம்....'' பார்வதி பிரமித்துப் போயிருந்தாள்.

''பின்னே.... பின்னே இதை யெல்லாம் என்கிட்ட நீ சொல்லவே இல்லையே?''

''இயர் அதிர்ச்சிகளை முதிய தலைமுறைகளால தாங்கிக்க முடியாது. அதனால தான் சொல்லலே. நான் காரண காரியங்களோடு விளக்கி உனக்குப் புரியுங்கிற நம்பிக்கை எனக்கு உண்டு. இன்னொரு அதிர்ச்சியையும் தரப் போறேன்.... எந்தப் புத்தகத்தைப் பார்த்து நீ ஆபாசம்னு திட்டுவியோ, அதே புத்தகத்திலேதான் என்னோட கதை கூட வந்திருக்கு.''

''என்ன நீ கதையுமா எழுதறே? இந்த ஆபாசப் பத்திரிகையிலா?'' — பார்வதி திணறினாள்.

''கதாசிரியை ரேவுவைப் பத்தி உனக்குத் தெரியாது. ஆனா தமிழ் நாட்டிலே அத்தனை பேருக்கும் தெரியும். என்னோட ஒரு பிரச்னை நாவலால பல பேர் திருந்தி இருக்காங்க. ஆண் பெண் உறவை மையமா வைச்சு நான் எழுதின ஒரு நாவலால் பல குடும்பத்துல இருந்த கணவன் மனைவி சண்டை குறைஞ்சு. அவங்க 'சைக்கியாட்ரிஸ்ட்' கிட்டப் போய் கன்ஸல்ட் பண்ணி சந்தோஷமா தங்களோட இல்லறத்தை, புது வாழ்வை ஆரம்பிச்சிருக்காங்க. என்னோட ஒரு கட்டுரையைப் படிச்சுட்டு ரொம்பப் பேர் கண் தானம் கூடக் கொடுக்க முன் வந்திருக்காங்க. எத்தனை கடிதங்கள்... எத்தனை வாசகர்களின் பாராட்டுக்கள்...இதெல்லாம் சமுதாயப் பிரச்னை இல்லையா பாட்டி? நல்லது கெட்டது நாலும் இருக்கும் போது, இது நல்லதுன்னு நம்மைத் தேர்ந்தெடுத்து, பாராட்டுக்களும், பரிசுகளும் தராங்க.... சமூகங்கிற பாம்பு கிட்டே விஷம் இருக்கும், மாணிக்கமும் இருக்கும் பாட்டி. விஷத்தை மருந்தாக்கி, மாணிக்கத்தை நகையாக்க வேண்டிய பொறுப்பு கதாசிரியருங்கிட்டே இருக்கு.''

ரேவதி பேசப் பேசப் பார்வதி பிரமித்துப் போகிறாள்: இத்தனை அறிவு முதிர்ச்சி, இத்தனை கருத்துச் செறிவுடன் என் பேத்தி 'ரேவு'வா பேசுகிறாள்?

''என்ன பாட்டி பேசாம இருக்கே? இளைய தலைமுறைங்க கிட்டே அன்பா பழகணும். ஆனா கண்குத்தக் கூடாது. பார்க்காதேன்னு சொன்னா ஆர்வம் அதிகமாகுது. நான் மட்டும் பார்ப்பேன், நீ பார்க்கக் கூடாதுன்னா சந்தேகம் அதிகமாகுது. அதனால காரண காரியங்களை விளக்கி, உண்மைகளை விவரமாக விண்டு வைக்கும்போது தப்பு வழியை விட்டு விலகி, தானே நல்ல வழிக்கு வந்திருவாங்க. என்ன நான் சொல்றது புரிந்ததா?''

''ஒரு நிமிஷம் இரு. இந்த 'ரேவு'ங்கிற கதாசிரியை எழுதின கதைகளை யெல்லாம் ஒரு மூச்சுலே படிச்சுட்டு அப்புறமாப் பேசறேன்'' என்ற பார்வதி மூக்குக் கண்ணாடியைத்துடைத்துப்போட்டுக்கொண்டு ஈசிச் சேரில் சாய்ந்து அமர்ந்தபடி படிக்க ஆரம்பிக்கிறாள்.

இனி, பார்வதிக்கு ரேவதி கதைகள் படித்துக் காட்ட வேண்டிய அவசியம் இராது. 'நல்ல கதைகளைத் தானே தேர்ந்தெடுத்துப் பார்வதி படிக்க ஆரம்பித்து விடுவாள். பார்வதி படித்துக் கொண்டிருக்கிறாள். அந்தப் 'புதிய' நல்ல 'வாசகி'யை ரேவு என்கிற கதாசிரியை அன்புடன் பார்க்கிறாள்.



**யார் கெட்டிக்காரர்**

ஒரு சிறுவன் தந்தையிடம் ''அப்பா புத்திசாலியா அல்லது குழந்தை புத்திசாலியா?'' என்றான். ''அப்பாதான் புத்திசாலி'' என்றார் தந்தை.

''பூமிக்கு ஈர்க்கும் சக்தி இருக்கிறதென்று கண்டு பிடித்தவர் யார்?'' என்றான் சிறுவன்.

''இது தெரியாதா சர் ஐசக் நியூட்டன்'' என்றார் தந்தை.

''அப்பாதான் புத்திசாலி என்றால் நியூட்டனின் தந்தை ஏன் புவிஈர்ப்புச் சக்தியைக் கண்டுபிடிக்கவில்லை?'' என்று வினவினான் சிறுவன்.

தந்தை பதில் சொல்லத் தெரியாமல் அசடு வழிந்தார்.

—அ. நடராஜன்


"நான் அப்பவே சொன்னே நம்பினீங்களா? ஒங்க அப்பாதான் எல்லாரும் தூங்கறச்சே அம்மாவோட ராகமாலிகா சேலையை கட்டிகிட்டு சமையலறைக்கு போய் கடலை உருண்டை சாப்பிடறார் விவரம் தெரியாம நம்ம பிள்ளையை பாவம் அடிச்சீங்க"!

## உரத்த சிந்தனை



# மனப்புண் ஆற்றுவோம்

துணைவன்

பஞ்சாபில் பாரத ராணுவ நடவடிக்கை சில பிரச்னைகளுக்குத் தீர்வு கண்ட போதி லும், எத்தனையோ சிக்கலான புது விளைவுகளை உண்டாக்கி வருகிறது. கவலைக்கிடமான காரியம் இது.

பிரசித்தி பெற்ற சரித்திரப் பேராசிரியர் எட்வர்ட் கிப்பன் ரோமானிய வரலாற்றில் ஒரு முக்கிய கட்டத்தைக் குறிப்பிடும்போது ''இழைத்த குற்றம் மறக்கப்பட்டது. ஆனால் விதித்த தண்டனை மட்டும் நினைவை விட்டு அகலவில்லை'' என்று ஓர் அரிய மனத் தத்துவ உண்மையைச் சொல்லி யிருக்கிறார். பஞ்சாப் நிலைமையைப் பொறுத்த வரையில் இது நூற்றுக்கு நூறு சரி என்றே தோன்று கிறது.

எது எப்படி யிருந்தபோதிலும், சீக்கிய சமுதாயம் பிறந்து வளர்ந்த வரலாற்றை இந்திய மக்களாகிய நாம் மறந்து விடுவதற் கில்லை. பாரத நாட்டின் சமயம், பண்பாடு, கலை, வாழ்க்கை முறை ஆகியவற்றுக்குப் பேராபத்து வந்த காலத்தில், நாட்டுப் பாதுகாப்புக்கு என்றே ''கால்சா'' என்ற வீரப் படைக் குலத்தை உருவாக்கினார் சீக்கிய குருமணி கோவிந்தசிங். அவரைக் குறித்து நமது மகாகவி பாரதியாரும், படைப்புக் கடவுளுக்கே ஒப்பிட்டுப் போற்றியுள்ளார்:

''ஐம்பெரும் பூதத்து அகிலமே சமைத்த
முன்னவன் ஒப்ப, முனிவனும் ஐந்து
சீடர்கள்* மூலமாய்த் தேசுறு பாரதச்
சாதியை வகுத்தனன், தழைத்தது தருமம்''
(*பஞ்ச் ப்யாரா)

சீக்கிய சமுதாயம் நம் நாட்டிற்குச் செய் துள்ள தொண்டு இவ்வளவு அவ்வளவுஅல்ல. வில் ஏர் உழவர்களாகவும் பொன் ஏர் உழவர் களாகவும் சீக்கியப் பெருங்குடி மக்கள் பாரதத் திருநாட்டைக் கண்ணினும் மேலா கப் பாவித்துக் காத்து வந்துள்ளார்கள்; காத் தும் வருகிறார்கள். கடந்த இரண்டாண்டு காலமாகப் பஞ்சாபில் நடைபெற்ற சோக நிகழ்ச்சிகளை ஒரு தீய கனவாக எண்ணி மறப்பதே எல்லோருக்கும் நல்லது. நம் கையே கண்ணில் பட்டுவிட்டால், என்ன தான் செய்ய முடியும்?

சமீப காலத்துத் துரதிர்ஷ்ட வசமான சம்பவங்களை மறப்போம், மன்னிப்போம். அமிருதசரஸ் பொற்கோவில் வளாகத்தில் ராணுவ நுழைவு — என்னதான் தவிர்க்க முடியாத, இன்றியமையாத சூழ்நிலையாக இருப்பினும் — பெருவாரியான நடுநிலை சீக்கிய உள்ளங்களையும் பெரிதும் புண்படுத்தியுள் ளது. இதை நாம் உணர்ந்தாக வேண்டும். சமய நம்பிக்கையிலும் பக்தியிலும் ஊறிய சீக்கிய மக்களின் இதயம் வேதனையால் துடிக்கிறது. அவர்களின் ஆத்மா, உளைச்சல் கொண்டுள்ளது. இதை யெல்லாம் காலம் தான் சாந்தி செய்ய முடியும்.

பாரத அரசு மேற்கொண்டுள்ள சுமுக உறவு முயற்சிகள் ஒருபுறமிருக்க, பொது மக்கள் தாமாகவே சில முன் முயற்சிகள் எடுத்தாக வேண்டும். நாட்டு மக்கள் யாவ ரும் — இந்து முஸ்லிம் மற்றும் யாவரையும் சேர்த்தே சொல்கிறேன் — இன்று முனைந்து செய்ய வேண்டிய காரியம் ஒன்றே ஒன்று தான்: நம் சீக்கிய உடன்பிறப்புக்களின் மனப் புண் ஆறுவதற்காக நாடு தழுவிய அளவில் அந்தரங்க சுத்தியோடு திட்டமிட்ட செயற் பாடுகளில் ஈடுபட்டுப் பணியாற்ற வேண்டும்.

என்னென்ன செய்யலாம் என்பதை, எனக்குத் தெரிந்தமட்டில் கீழே கொடுத் திருக்கிறேன்.

1. நம்நாட்டின் எல்லாப்பகுதிகளிலுமிருந் தும் இந்து சமயக் குழுவினரும் பிறரும் அணி அணியாக அமிர்தசரஸ் பொற்கோவிலுக்குச் சென்று வழிபாடு செய்தல்.
















(2) நாட்டின் முக்கியமான குருத்வாரா (சீக்கியக் கோவில்)களுக்கு அருகில், சீக்கிய சமயம் வரலாறு மற்றும் சாதனைகளை விளக்கும் கண்காட்சிகளுக்கு ஏற்பாடு செய்தல்.

(3) வெவ்வேறு மொழிகளிலும் வெளி வரும் பாரதப் பத்திரிகைகள் சீக்கியப் பண்பாடு, வரலாறு, கலை, சமூக வாழ்க்கை, கடல்கடந்த சீக்கியர் மேம்பாடு மற்றும் நல்லியல்புகள் பற்றிய சிறப்பு மலர்களை வெளியிடல்.

(4) அகில இந்திய வானொலியும் தொலைக் காட்சி மையங்களும் சீக்கியர் சமுதாயச் சிறப்பையும் நாட்டுப் பற்றையும் தியாகங் களையும் சித்திரிக்கும் பொது நிகழ்ச்சிகளும் கவியரங்கம், உரைக் கோவை, நிலாமுற்றம் வினாடி வினா போன்ற சிறப்பு நிகழ்ச்சிகளும் ஒலி, ஒளி பரப்பலாம்.

(5) அமிருதசரஸ் பொற்கோவில் வளா கத்தில் சேதமுற்ற பகுதிகளைத் திரும்பக்- கட்டும் திருப்பணி முயற்சிகளுக்கு இந் துக்கள் அனைவரும் தம்மாலான பொருளுதவி அளிக்கலாம். நாடெங்கிலுமுள்ள இந்துக் கோவில்கள், மடாலயங்கள் மற்றும் அறக் கட்டளை நிறுவனங்கள் தாராளமாக நிதி வழங்க முன்வர வேண்டும். இது மிகவும் சிறப்புக்குரியது.

(6) சீக்கிய சமுதாயத்துக்குப் பாரதநாடு எவ்வளவு தூரம் நன்றிக் கடன் பட்டுள்ளது என்பதை அனைவரும் மனத்தில் மட்டும் வைத்துக் கொண்டிருந்தால் போதாது. அதை வெளிப்படையாக, ஊரறிய உலகறியப் பிரகடனப்படுத்த வேண்டிய தருணம் இது. இல்லையேல், நாம், வரலாற்றுப் படிப்பினைகளை மறந்தவர்களாகி விடுவோம்.

(7) இந்து – சீக்கிய உறவுகள் வெகு விரைவிலேயே பரஸ்பர நம்பிக்கையும் நல் லிணக்கமும் கொண்டதாக அமைந்து ஒரு நல்ல மாறுதலான சூழ்நிலை ஏற்பட்டாக வேண்டும். அப்படி ஏற்படாமல் போனால், அனர்த்த விபரீத விளைவுகள் உண்டாவது திண்ணம். இதை உணர்ந்து நமக்கு நாமே எச்சரிக்கை விடுத்துக் கொள்ள வேண்டும். இதுவே இன்று சுதந்திர மக்களாகிய நம் முடைய ஜனநாயகக் கடமை.

இத்தகைய இணக்கமான சூழ்நிலை உருவாக மக்களுக்குப்பிரதமரும் மற்றதலைவர் களும் வழிகாட்ட வேண்டும்.

* கட்டுரை ஆசிரியர் திரு. எஸ்.கந்தசாமி, துறைவன் என்ற புனை பெயரில் பல கதைகள், கவிதைகள் இயற்றியவர். கடைசியாக புது தில்லியில் அகில இந்திய ரேடியோவின் துணை டைரக்டர் ஜெனரலாக உயர் பதவி வகித்து ஓய்வு பெற்று இன்று நாகர்கோவிலில் வாழ்ந்து வருகிறார்.

# நிறம் மாறும் ஓவியங்கள்



## நா. காமராசன்

தெய்வீக உணர்ச்சியோடும் பரிவோடும் எதிர்கொள்ளப்பட்ட சொற்களின் போதை நிறைந்த இன்பச் சித்திரங்கள் மங்கிப் போகும் இலக்கிய வீழ்ச்சி மிகப் பெரிய எழுத்தாளர்களின் வாழ்விலே கூடச் சம்பவித்து விடுகிறது. வாழ்க்கை ஆபத்துக்கள் நிறைந்தது என்பதை அறிந்திருந்தும் கூட— அதனால் சோர்வடைந்து விடுவதனாலேயே இது நேர்கிறது. வார்த்தைகளின் ஒழுங்கும், கட்டுக்கோப்பும் கசந்த மனோபாவத்தால் சிதிலமாக — அகநிலையை உணர்த்தும் புலனறிவுக் கூர்மை தேய்ந்து போய் விடுகிறது.

ஆழ்ந்த சிந்தனையில் இருந்து எழுந்தபடைப் பாற்றலின் சின்னங்களும், வடுக்களும் அகத்தின் அந்தரங்கத்திலிருந்து உதிர்ந்து விடுகின்றன. படைப்பாளியே ஒரு வாசகனாகி அவனது படைப்புக்களைத் தேடும் போது — அவையெல்லாம் அவனுக்கு அறிமுகமாகாத புதுச்சாயல் கொள்கின்றன. ஒரு தூரிகை — எழுதிமுடித்த பிறகு நிறம் மாறும் ஓவியங்களைப் பார்ப்பதைப் போன்ற அதிர்ச்சி ஏற்படுகிறது.

பொருளையெல்லாம் ஊடுருவி — அதைக் கரைத்து ஒரே சமயத்தில் கனவுகளையும், உண்மைகளையும் உருவாக்கி அழிவற்ற அமர சக்திகளை ஒன்றோடொன்று கலந்து விளையாடச் செய்த கைகள் முடங்கிப்போய் விடுகின்றன. முன் நாட்களில் திட்டமிடப்பட்ட இலக்கிய லட்சியங்களை நண்பர்கள் நினைவூட்டும் போது — அவர்களது ஞாபக சக்தியே பெரிதாகத் தெரிகிறது. ஆனால் அந்த இலட்சியங்கள் ஒவ்வொன்றும்...



அவனது ரத்தத்தில் ஒரு துளியைக் குடித்து வீங்கி — அமைதியும், மகிழ்வும் நிரம்பிய ஒரு காலத்தில் சுடர் வீசிய கதிரவனின் ஒளி— இப்போது மங்கலாகி விட்டபின் —இருளடைந்த சுவர் மேல் சோர்வுற்ற ஒரு கொசு நடனமாடுவது போல — அவன்முன் தெரிகின்றன.

திரைக்கு அப்பாலிருந்து தென்றலென வீசி அவனை ஈர்த்து, ஆட்கொண்ட ஒருமுடிவற்ற அந்தரங்க விவேகத்தின் சித்திர எழுத்துக்கள் மறையத் தொடங்குகின்றன.

அவனது இலக்கியப் பிரவேசம் ஆரம்பமாகும் போது — தனிமையும், சமூக உறவும் அவனுக்கு ஒன்றாகவே இருக்கின்றன. கனவு போன்ற தேவலோக உணர்வுகளும், புலன் உணர்வுகளும் சமமாகவே நிகழ்கின்றன. எதிலும் — மையத்தில் அவனே இருக்கிறான். இந்த நிலை மாறி அவனிடம் நிரந்தரமாகக் குடி கொண்டுவிட்ட எல்லையற்ற சோர்வும், தளர்ச்சியும் படித்த நிலைக்கேற்ப மாறி வாழ்வும் அவனுக்குச் சோர்வூட்டுகிறது. தாகத்தால் துடிக்கும் அவனுடைய உதடுகளை விட்டு... சலசலக்கும் இலக்கிய ஓடை தூர விலகிச் செல்கிறது. பல எழுத்தாளர்களின் வாழ்வில் ஏற்பட்டுள்ள இலக்கிய வீழ்ச்சிக்கு ஏதோ ஒரு மனமுறிவு காரணமாக இருக்கிறது. ஆனால்— இவைகளையெல்லாம் தகர்த்தெறிந்து விட்டுப் பேனா பிடிப்பவனே இலக்கிய உலகத்தின் தலைவன் ஆகிறான்.

---

முப்பது கிலோ மீட்டர் வேகத்திற்கு அதிகமாக ஓடும் ஒரு குதிரையை ஒரு கொசுவால் பின் துரத்திப் பிடிக்க முடியும்.

எஸ். விஜயா சீனிவாசன்





வில்லிபுத்தூர், (குத்தாலம்) திரு பஞ்சாபகேச அய்யர் குமாரத்தி
சௌபாக்கியவதி பானுமதிக்கும் சென்னை அபிராமபுரம் திரு ராஜன்
(RAJAN & CO. PAPER MERCHANTS) குமாரர் சிரஞ்சீவி வெங்கட்ரமணிக்
கும் ஏப்ரல் 20ந்தேதி மாயவரத்தில் திருமணம் வெகு விமரிசையாக நடந்தது.
வாழ்க மணமக்கள்.



பம்பாய் ஸ்ரீ A. ராஜாராம் அவர்களின் குமாரத்தி சௌபாக்கியவதி
ராதிகாவிற்கும் ஸ்ரீ G. S. சுப்ரமணியம் அவர்களின் குமாரன் சிரஞ்சீவி
ஹரிஷங்கருக்கும் சமீபத்தில் பம்பாயில் விவாஹம் வெகு சிறப்பாக
நடைபெற்றது. வாழ்க மணமக்கள்.

# உலக நாயகியும் விசுவநாதரும்

தென்காசி ரயில்வே ஸ்டேஷனில் பெருமூச்சுடன் வண்டி நின்றது. ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் காலை வைக்கும்போதே மனத்தை என்னவோ செய்தது. எத்தனை தடவை கல்கியவர்கள் இந்த ஸ்டேஷனில் வந்து இறங்கியிருக்கிறார். எத்தனை தடவை ராஜாஜியவர்கள் வந்திறங்கித் திருக்குற்றாலம் போயிருக்கிறார். ரசிகமணியவர்களின் பாதச் சுவடுகள் பதிந்த இடமாயிற்றே!

எத்தனை கவிஞர்கள், எத்தனை ரசிகர்கள், எத்தனை பண்டிதர்கள், எத்தனை தமிழன்பர்கள் இந்த ஸ்டேஷனில் வந்து இறங்கித் திருக்குற்றாலம் சென்று ரசிகமணியவர்களின் அன்பில் திளைத்து, அருவிகளில் குளித்து, தமிழ் இன்பம் பருகியிருக்கிறார்கள்!

திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த தென்காசி சந்திப்பில் இறங்கி, தண்டவாளத்தைக் கடந்து வாசலுக்கு வருவதற்குள் பழைய நினைவுகள் திக்குமுக்காடச் செய்துவிட்டன. தென்காசிக்கு ஒரு அடையாளச் சின்னமாக விளங்கிய இரண்டாகப் பிளந்த கோபுரமும் இந்தக் கோயிலை எழுப்பிய பராக்கிரம பாண்டியனின் – மனத்தை அப்படியே உருகச் செய்யும் - கவிதையும் நினைவுக்கு வந்தன. சிறுமியாக இருந்தபோது ரசிகமணியவர்களுடன் காசி விசுவநாதர் கோவிலுக்குப் போனதும், இடிந்த கோபுரத்தைப் பார்த்ததும் திரும்பி வந்ததும் டி. கே. சி. அவர்கள் கல்வெட்டுக் கவிதையைச் சொன்னதும் நேற்று நடந்தது போல் ஞாபகம் வந்து கண் கலங்கச் செய்தது.

ஆனால் என்ன ஏமாற்றம்? கோவில் எங்கே போய்விட்டது? எங்கேயும் போகவில்லை. இடிந்த கோபுரத்தை முழுவதுமே இடித்துவிட்டார்கள். இப்போது கோபுரமில்லாத வாயிலை மட்டும்தான் காண்கிறோம்.

பதினைந்தாம் நூற்றாண்டில் அரசாண்ட ஜடிலவர்மன் அரிகேஸரிதேவ பராக்கிரம பாண்டியன் என்ற மகா பக்திமானான அரசன் தென் காசியைத் தலைநகரமாகக் கொண்டு அரசாண்டு வந்த நாளில் கட்டிய கோவில். இந்தக் கோவிலைக் கட்டி முடிக்கப் பதினேழு ஆண்டுகள் ஆயிற்று என்று கூறுகிறார்கள். இந்தச் சாதனையே அந்த மன்னனுக்குப் பராக்கிரம பாண்டியன் என்ற பட்டப் பெயரை வாங்கித் தந்திருக்கக் கூடும் என்று தோன்றுகிறது.

தென்னாட்டில் காசி விசுவநாதர் கோவிலைக் கட்டியதற்குக் காரணம் கல் வெட்டுக்களில் காணப்படுகிறது. 'பாண்டியன் கனவு'' என்ற தலைப்புடன் வெளியிடப் பட்டிருக்கும்



ஹம்ஸ வாகனத்தில் ஸ்ரீதேவி



கரும்பு ஏந்திய கரத்துடன் வேணுகோபாலன்

ஆனந்தி

தல வரலாற்றில் கோவிலைப் பற்றிய அத்தனை விவரங்களும் தரப்பட்டிருக்கின்றன.

பாண்டிய மன்னரின் கனவில் காசி விசுவநாத சுவாமி தோன்றி தெற்கே தனக்கு ஒரு கோவிலை எழுப்ப வேண்டும் என்று கட்டளையிட்டாராம். அதனைச் சிரமேற் கொண்டு அரசன் கோவிலைக் கட்டினாராம்.

மன்னரும் பட்டமகிஷியும் குலக் கடவுளான முருகனை வழிபட்டு ஒரு ''குளிகை'' பெற்றதாகவும் அதன் சக்தியால் தினமும் காசி சென்று வழிபட்டு வந்ததாகவும் பின்னர் மக்கள் எல்லோரும் இந்தப் பாக்கியத்தை அடைய வேண்டும் என்று காசி விசுவநாதருக்குக் கோவிலைக் கட்டி அந்தத் தலத்துக்கே தக்ஷிண காசி என்று பெயர் சூட்டியதாகவும் தல புராணம் கூறுகிறது.

நுழை வாயிலிலேயே பல கல் வெட்டுக்களை நாம் காண்கிறோம். கோவிலுக்கு அழைத்துச் சென்று தரிசனம் செய்வித்த டி.கே.சி. அவர்களின் பேரனான தீப. நடராஜன் ''இதோ தாத்தா அனுபவித்துச் சொல்லி வந்த பாடல்'' என்று காட்டினார்.

ஆராயினுமிந்தத் தென்காசி மேவு
பொன்னாலயத்து
வாராத தோர்குற்றம் வந்தாலப்
போதங்கு வந்ததனை
நேராக வேயொழித்துப் புரப்பார்களை
நீதியுடன்
பாரா ரறியப் பணிந்தேன் பராக்கிரம
பாண்டியனே!

இப்போது படிக்கும்போதும் தொண்டையை அடைத்துக் கொள்கிறது. ஒன்பது நிலை மாடக் கோபுரம் இரண்டாகப் பிளந்து போகும் என்று ஏற்கனவே தெரிந்த மாதிரியல்லவா இந்தப் பாடல் அமைந்திருக்கிறது.

சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு முன் நெருப்பினால் எரிந்துபோன கோபுரத்தைப் பல லட்ச ரூபாய் செலவில் மீண்டும் கட்டி முடிப்பதற்கு இப்போது முயற்சி நடந்து வருகிறது என்று கேட்டுச் சற்று சமாதானமடைகிறோம். பக்தர்கள் மனம் வைத்தால் சீக்கிரமே கோயில் வானளாவும் கோபுரத்துடன் காட்சி தரும்.

முதல் பிராகாரத்தைக் கடந்து மண்டபத்துக்கு வருகிறோம். இங்கு நின்றுகொண்டிருந்தால் நேரம் போவதே தெரியாது. ஒவ்வொரு தூணும் ஒரு கவி சொல்லுகிறது. பதஞ்சலி வியாக்ரபாதர் கண்டு களிக்கும் வண்ணம் கருங்கல்லில் பதினாறு கரங்களுடன் நடராஜர் மூர்த்தியைச் செதுக்கிய பெயர் தெரியாத சிற்பியை வாழ்த்துகிறோம். அன்னப் பறவையின் மீது அமரப் போகும் நிலையில் ரதிதேவி. அன்னத்தை விட மென்மையான அழகை அந்தச் சிற்பத்தில் காண்கிறோம். கருங்கல்லால் செய்த சிற்பம் என்று நம்பவே முடியவில்லை.

எதிர்ப்புறத்தில் மன்மதன் காணப்படுவது அதிசயமில்லைதான். ஆனால் கரும்பு வில்லைக் கையில் ஏந்தி சங்கு சக்கரதாரியாய்க் குழலூதும் பெருமான் யார்? என்ன அற்புத வடிவம்? எந்தச் சிற்பியின் கற்பனையோ?

செங்கனி வாயில் ஒரு
வேய்ங்குழல் கொண்டிசைத்து
இன்னமுதம் பொழிவோன்
யார் சொல்! சொல்! கிளியே!

பாடிக் கொண்டே உச்சிகால பூஜையைக் காணச் செல்கிறோம். போகும்போதே பெரிய வடிவமுள்ள நந்திகேசுவரரைத் தரிசனம் செய்து கொள்கிறோம். வழியிலே காசித் தீர்த்தம் என்ற பெரிய கிணறு இருக்கிறது.



தென்காசியின் சின்னமாக விளங்கிவந்த கோபுரம்



கோவிலைக்கட்டிய ஜடிலவர்மன் அரிகேஸரி தேவ பராக்ரம பாண்டியன்

மகா மண்டபத்தில் உள்ள செல்வங்களான உற்சவ மூர்த்திகளை முதலில் தரிசனம் செய்கிறோம். சுவாமி சந்நிதிக்கு இடது புறம் உமா மகேசுவரர் வீற்றிருக்கிறார்கள். இவர்களுக்கு எதிரே குவிந்த கரங்களுடன் சதா சர்வ காலமும் சிவ தரிசனம் செய்து கொண்டே இருப்பவர் ''சுந்தரமூர்த்தி சுவாமிகளோ?'' என்று கேட்கிறோம். ''இவர்தான் பராக்கிரம பாண்டியர்'' என்று பதில் வருகிறது. இந்தப் பராக்கிரம பாண்டியருக்கு உற்சவ காலங்களில் முதல் மரியாதை செய்யப் படுகிறது. தேரின் வடம் பிடிக்கும் முதல் மனிதர் இவரே. விழா முடிந்ததும் பிரசாதம் அளித்துப் பரிவட்டம் கட்டி மரியாதைகள் செய்வார்கள். எப்பேர்ப்பட்ட பாக்கியசாலி!

சுவாமிக்குத்தீபாராதனை நடைபெறுகிறது. சுவாமிக்குச் சாத்திய புஷ்பமும் விபூதியும் அளிக்கிறார் குருக்கள்.

வலம் வரும்போது பரிவார தேவதைகளைத் தரிசிக்கிறோம். அறுபத்துமூவரைத் தரிசித்துக் கொண்டே போகும்போது ஜுர தேவர் மூன்று கால்கள் மூன்று கைகளுடன் தரிசனம் தருகிறார். கடுமையான காய்ச்சல் வந்தால் ஜுர தேவருக்கு வேண்டிக்-கொண்டு மிளகு அரைத்து இவருக்குப் பூசிப் பின்னர் வெந்நீரால் அபிஷேகம் செய்வார்களாம்.

சுவாமி கோவிலை அடுத்து ஒரு பக்கம் பலா மரமும் இன்னொரு பக்கம் சண்பக மரமும் இருக்கிறது. இந்த இடத்துக்குச் செண்பக வனம் என்று பெயர் வழங்கியதாகவும் செண்பகம்தான் தல விருட்சம் என்றும் கூறினார்கள்.

பிறகு கோவிலின் நடுநாயகமாக உள்ள முருகப் பெருமானின் கோவிலை அடைகிறோம். இந்தப் பால முருகன் சமீப காலத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டவர். முன்பு இங்கே அவருடைய மாமாவான திருமாலின் திருவுருவம் இருந்ததாம். ஏதோ காரணத்தினால் அவரைத் தூக்கிக் கொண்டு போய் வேறு இடத்தில் கோவில் கட்டினார்கள். கோவிலுக்குக் கோபுரம் கட்ட வேண்டுமென்று தொடங்கியபோது 1967ல் மருகனை முருகனை இங்கே எழுந்தருளச் செய்திருக்கிறார்கள். அதனால் கோவிலே சோமாஸ்கந்த வடிவமாக விளங்குகிறது. பளபளவென்று மொஸைக் தளத்துடன் விளங்குகிறது முருகன் கோவில்.

லோக நாயகி என்று அடியார்களால் புகழப்படும் அன்னையின் சந்நிதி. உள்ளே செல்வதற்கு முன் பத்துக் கரங்களுடன் மடியில் பத்தினியுடனும் காட்சி தரும் வல்லப விநாயகரைப் பார்க்கிறோம். அழகான பெரிய வடிவம்.

லோகநாயகி அம்மைக்கு உலகம்மை, குழல்வாய்மொழி, விசுவேசை, விசாலாட்சி, முக்கண்ணி, வசந்தவல்லி என்றெல்லாம் பெயர் சூட்டி மகிழ்கிறார்கள் இந்தப் பக்கத்துப் பக்தர்கள். சகல உலகங்களுக்கும் தாயாக விளங்கும் அன்னைக்கும் விசுவநாதருக்கும் ஐப்பசி மாதத்தில் திருக்கல்யாண உற்சவம் மிக விமரிசையாக நடைபெறுமாம்.

இந்தக் கோவிலில் ஈசனை வழிபட்டுப் பேறு பெற்றவர்களில் அகஸ்திய மகரிஷியும் மிருகண்டு முனிவரும் முக்கியமானவர்கள். தென்னாட்டில் அகத்திய முனிவருக்கு இருந்த செல்வாக்கு அற்புதமானது. தமிழை அளித்த முனிவர் ஆயிற்றே. அதிலும் பொதிகை மலைச் சாரலிலுள்ள தலங்களுக்கு அவர் வராமல் இருந்திருக்க முடியுமா?

அதிகார நந்தி பிறந்த ஊர் தென்காசி தலம் என்கிறது தலபுராணம். வாலி இங்கே வந்து தென்காசி விசுவநாதரைப் பணிந்து தவமிருந்தபடியால்தான் ''தன்னோடு போர் செய்பவரின் வலிமையில் பாதி தனக்குக் கிடைக்கும்'' என்று வரம் பெற்றதாக ஒரு வரலாறு. சன்னுவ மகரிஷி வழிபட்டதாகவும் கூறுகிறார்கள்.

சித்ரா நதிக் கரையில் உள்ள பொருந்தி நின்ற பெருமான் ஆலயத்தையும் தரிசனம் செய்துவிடலாம். ஸ்ரீ விசுவநாதர் கோவிலுடன் தொடர்புடையவராயிற்றே.

மாலை இருட்டிய பிறகு கோவிலுக்குச் செல்கிறோம். விளக்குகள் ஏற்றப்பட்டு மங்களகரமாய் விளங்குகிறது ஆலயம்.

பொருந்தி நின்ற பெருமாள் ஸ்ரீதேவி பூதேவி சமேதராகக் காட்சி தருகிறார். அழகான வடிவம். சீவல்லபன் என்ற பாண்டிய மன்னர் விஜயநகர அரசனுக்குத் தம் மகளைக் கல்யாணம் செய்து கொடுத்தார். விஜயநகர மன்னரான அச்சுத தேவ ராயர் வைஷ்ணவரானபடியால் தம் மருமகனை மகிழச் செய்யத் தென்காசி கோவிலில் ஈசனுக்கும் உமைக்கும் நடுவில் ஸ்ரீமந் நாராயணனுக்குக் கோயில் கட்டினார் சீவல்லப பாண்டியன்.

சிவபெருமான் கோவிலில் மகாவிஷ்ணு இருப்பது சரியல்ல வென்று கருதியவர்கள் பெருமாளை அப்புறப்படுத்தி விட்டிருக்க வேண்டும். பின்னால் அவருக்கு ஆலயம் எழுப்பியிருக்க வேண்டும். தீபாராதனை செய்து திருத்துழாயும் தீர்த்தமும் அளித்த பட்டரிடம் இது யார் கட்டிய கோவில் என்று கேட்டபோது ''ஸ்ரீ ராமானுஜர் சித்ர நதியருகே வந்தபோது அவர் வேண்டியபடி இங்கே பொருந்தி நின்றார்; அதனால் பொருந்தி நின்ற பெருமாள். உற்சவர் ஸ்ரீநிவாசப் பெருமாள். ஸ்ரீ ருக்மிணி ஸத்யபாமா சமேதராகக் காட்சி தருகிறார்'' என்றார்.

மிக அழகான கண்ணனுடைய விக்ரகம் ஒன்று அருகில் மாலை சூட்டப்பட்டு விளங்கிற்று. இரண்டு கைகளிலும் வெண்ணெய் உருண்டைகள். தலையில் கிரீடம், கொண்டையில்லாமல் வாரிய தலை. சிறுவனுக, அழகு பிம்பமாக நிற்கும் தோற்றம் கண்களைக் கவர்ந்தது.

வெண்ணெய் திருடும் பிள்ளை
என்னுளம் கவர்ந்ததென்ன?
கண்ணால் மொழிந்த தென்ன
சொல்வாய் பைங்கிளியே

## பசுவை பூஜிப்பது ஏன்?

பிரும்மாவும் விஷ்ணுவும் பசுவின் கொம்பினடியில் இருப்பர், கோதாவரி முதலிய தீர்த்தங்களும், சராசரங்களும் கொம்பின் நுனியில் இருக்கும்; சிவன் சிரத்திலும், உமாதேவி நடு நெற்றியிலும், முருகக் கடவுள் மேல் நாசியிலும், நாகேசர் உள் நாசியிலும், அசுவினித் தேவர் இரண்டு காதுகளிலும், சூரியனும் சந்திரனும் இரண்டு கண்களிலும், வாயு பல்லிலும், வருணன் நாவிலும், சரஸ்வதி ஹுங்காரத்திலும் எமன், இருதயத்திலும் இயக்கர்கள் கெண்டைத் தலத்திலும், உதயாஸ்தமன சந்திரன் உதட்டிலும், இந்திரன் கழுத்திலும், அருக்கர்கள் திமிலிலும், சாத்தியர் மார்பிலும் அனில வாயு நான்கு கால்களிலும், மருத்துவர் முழந்தாள்களிலும், நாகலோகத்தார் குரத்தின் நுனியிலும், கந்தருவர் குரத்தின் நடுவிலும், தேவ மாதர்கள் மேற்குரத்திலும், உருத்திரர் முதுகிலும், வசுக்கள் சந்திகளிலும் பிதிர்கள் அரைப் பலகையிலும், சத்தமாதர்கள் பகத்திலும் இலக்குமி அபானத்திலும் நாகேசர் அடிவாலிலும் இருப்பர். சூரியஜொளி வால் மயிரிலும், யமுனை சாணத்திலும் இருக்கும். முனிவர்கள் உரோமத்திலும் பூமிதேவி உதரத்திலும் இருப்பர். சமுத்திரம் முலையிலும், காருகபத்தியம் முதலிய அக்கினி மூன்றும் முறையே வயிறு, இருதயம், முகம் என்னும் உறுப்புக்களிலும் யாகங்கள் எல்லாம் எலும்பிலும், சுக்கிலத்திலும் இருக்கும். கற்புடை மகளிர் எல்லா அவயவங்களிலும் இருப்பர்.

— 'காமகோடி பிரதீபம்'



## வெள்ளித்திரை

# நீங்கள் கேட்டவை

### கேட்டுக் கிடைத்தது

**காமிரா:** கண்ணில் ஒற்றிக்கொள்கிற காட்சிகள், வர்ணக் கோலங்களில் சிலசமயம் ஆயில் பெயிண்டிங் பார்க்கிற மாதிரியான சுகானுபவமே கிடைக்கிறது. குழந்தைகள் மழலை என்றால் பாலு மகேந்திராவுக்குத் தனி குஷிதான். இதிலும்தான். 'பிள்ளை நிலா' பாடல் காட்சியில் பூர்ணிமாவும், இரண்டு சுட்டிகளும் ஒவ்வொரு ஃப்ரேமிலும் வாழ்கிறார்கள்.

**இசை:** யப்பா, இந்த இளையராஜாவிடம் தான் எத்தனை அற்புதமான கற்பனை. ஒவ்வொரு பாடலும் தனி முத்திரை. 'ஓ, வசந்த ராஜா'வும் 'கனவு காணும்' பாடலும் ரொம்ப ஸ்பெஷல். பின்னணியும் நெடுக ஒரு சுகம்.

### கேட்டாலும் கிடைக்காதது

**கதை:** சரி சார், மசாலாப் படம்தான். அதற்காக ஒரு இழை அளவாவது புதுமையான கதையாய் இருக்கக் கூடாதா என்ன? அம்மா பாடிய பாட்டு கடைசியில் அண்ணன் தம்பியைச் சேர்த்து வைக்கிற 'யாதோங்கி பாராத்' வயதுக் கற்பனைதானா பாலு மகேந்திராவுக்கும்?

**காட்சி அமைப்பில் புதுமை:** ஊஹூம். காமிராவுக்கு இருக்கிற சின்ஸியரிட்டி கற்பனைக்கு இல்லை. எனவே புது பெயிண்டிங்கில் பழைய படங்கள். வறட்சியாக நேரத்தை நகர்த்தும் யோக்யதை இல்லாத காட்சிகள்.

**நடிப்பில் சிறப்பு:** சும்மாவாவது சோமையாஜுலு, பூர்ணிமா ஜெயராம் அது இது என்று பட்டாளத்தைக் காட்டியிருக்கிறார்களே தவிர மனசில் நிற்கிற மாதிரி மாஸ்டர் விமல் தவிர யாராவது உண்டா என்றால் மூச்!

**நகைச்சுவை:** மெல்லிசை மேடைகளில் இடைவேளையில் செய்கிற மிமிக்ரி மாதிரி ஒய். ஜி. மகேந்திரன்—வனிதா நகைச்சுவை அரதப் பழசு. கொஞ்சம் அதிகப்படியான விரசம் மட்டும் புதுசு.

**அசத்துகிற சண்டைக் காட்சிகள்:** ரொம்பவும் எதிர்பார்த்ததாலோ என்னவோ உப்பு, காரம் எதுவும் இல்லாத சண்டைக் காட்சிகளில் காமிராக் கோணம் தவிர சொல்லும்படி எதுவும் இல்லை.

**நெஞ்சில் பதிகிற விஷயங்கள்:** லிஸ்ட் போடலாம் என்று பேப்பர் பேனாவை எடுத்துக் கொண்டால் வெற்றுத் தாளோடு உட்கார்ந்திருக்க வேண்டியதுதான்.

ஹலோ, பாலு மகேந்திரா, இதையா கேட்டோம்?



# நாணயம் இல்லாத நாணயம்

சென்னை சென்ட்ரலில் புறப்படுகிற ரயில் எக்மோர் வந்து, வில்லிவாக்கம் போய், மறுபடியும் தாம்பரத்துக்குத் திரும்பி—

அப்படித்தான் ஆரம்பிக்கிறது படம். லஞ்சம் வாங்குகிற பிரின்சிபால், எதிர்த்து நிற்கும் மனேஜர் என்ற டம டமால் ஆரம்பத்தைப் பார்த்தவுடன் ஓஹோ மாணவர் பிரச்னையை விசு ஆராயப் போகிறாராக்கும் என்று எண்ணவைத்து, திடீரென்று 'சின்ன வீடு' ஒன்றைக் கொண்டுவந்து — குடும்பச் சிக்கல் கதைம்மா இது என்று மூளையைக் கசக்கிக் கொண்டு — கதை மறுபடியும் ஒரு குடாலடி திரும்பலுடன் ஆண்டவரைப் பார்த்து ஓடுகிறது. கடைசியில் பார்த்தால் வீரபாண்டித் தேவருக்கும் ஆண்டவருக்கும் ரேஸ் என்ற ட்ராக்கில் படம் ஓட ஆரம்பிக்கிறது. அப்புறம்தான் லைன் கிளியரான எக்ஸ்பிரஸ் வேகம்.

அந்த அபார உயரம், மழுமழு மொட்டைத் தலை, ஜிப்பா, புகையும் பைப், கொடூரமான முகம் — யார் இது?

குரல் மட்டும் தகர சிலேட்டில் குச்சி கிறின சத்தத்துடன் கேட்காமலிருந்திருந்தால் நம் அப்பாவி கிஷ்முதான் ஆண்டவர் என்பதை நம்பியிருக்கவே முடியாது. வேஷம் அவ்வளவு பாந்தம். (பொருத்தமாய் ஒரு குரலைத் தேடிப் போட்டால் தப்பில்லை விசு சார்)

ஜூடோ ரத்னம் — வாத்யார்என்றைக்கும் வாத்யார்தான் என்று நிரூபித்து விட்டார். என்ன சுழற்சி, என்ன தாவல், என்ன குத்து? திரைக்குப் பின்னணியில் இருந்தவரை முன்னணிக்கு இழுத்துவிட்டார். பாலசந்திர விசு ஸ்டைலோ?

பாட்டு இருக்க வேண்டும். சரிதான். இனிமையாக இருக்க வேண்டும் சரிதான். ஆனால் நேரம் கெட்ட நேரத்தில் கொண்டுவந்து செருக வேண்டுமா என்பதுதான் கேள்வி. விஜய் ஆனந்த் இசையை நன்றாகப் பண்ணியிருந்தாலும் இந்த ஒரு விஷயத்தால் எடுபடாமல் போகிறதே புரியவில்லை?

'நான் எப்படி ஆர்க்யூ பண்ணப் போறேன்னு...' என்று ஆரம்பித்துப் பதினைந்து நிமிடத்துக்குக் கோர்ட் ஸீன். தோட்டத்து பங்களா, நாய் மோப்பம் என்று விலாவாரியாகக் காட்டிவிட்டு, கடைசியில் அத்தனையும் இனிமேல் நடக்கப் போகிற சமாச்சாரம் என்கிறீரே — போய்யா டைரக்டர் விசு, உம்மோடு டூ.

'என் பையனு, அவன் தங்கம்னு' என்று மாமனார் சொல்ல 'தினமும் உரசிப் பார்க்கிற என்கிட்டயே சொல்றீங்களே மாமா' என்று மருமகள் ராஜலட்சுமி (லக்ஷ்மிகரமான முகம்) பதிலடி கொடுக்க — போல் வசனகர்த்தா விசு பெரிய ஆளய்யா நீர். டூ விட்ட அடுத்த செகண்ட் பழம் விட வைத்து விட்டீரே!

சதுரங்கப் பலகையை எதிரில் வைத்துக் கொண்டு ஒவ்வொரு காயாய் நகர்த்துகிற மாதிரி நகர்த்தியிருக்கிறார் விசு. நகர்த்தப்படும் காய்கள் எஸ். வி. சேகர் (எப்போதும் போல அசடு) லெசந்திரன், இன்ஸ்பெக்டர் ராஜேஷ் (ஓஹோ இல்லை — ஓ.கே. ) பைத்திய சத்தியகலா (ம்.. பரவாயில்லை).

சில கதைகள் படிக்கும்போது கீழே வைக்க விடாமல் ஓடிக் கொண்டே இருக்கும். முடித்த பின் அதைப்பற்றி அப்புறம் எண்ணத் தோன்றாது.

அந்த ஜாதிப் படம்தான்.

-ஜெயமன்மதன்

**உண்மைக் கதை**

இலங்கையில் இழைக்கப்பட்ட கொடுமைகள் தாங்காமல் தமிழ் நாட்டிற்கு ஓடி வந்த தமிழ்க் குடும்பங்கள் ஏராளம். அந்த அகதிகளுக்கு இங்கு ஏற்பட்டிருக்கிற வாழ்க்கை நிலைமையோ இன்னும் கொடுமையானது.

அகதிகளாக வந்து திருச்சியில் முகாமிட்டிருந்த 46 குடும்பங்களை — வேலை வாங்கித் தருவதாகக் கூறி ஆந்திராவுக்குக் கூட்டிப் போயிருக்கிறார்கள் சில காண்ட்ராக்டர்கள்.

குண்டக்கல்லுக்கு அருகில் உள்ள காசாபுரம் என்கிற இடத்தில் ஒரு டயர் தொழிற்சாலை தொடங்கப்படுவதாகவும், அதற்குக் கூலி ஆட்கள் தேவை என்றும் கூறி இவர்களை அழைத்துச் சென்றிருக்கிறார் ஒருவர்.

அவர், இவர்களையெல்லாம் அங்கே அழைத்துப் போய் இறக்கி விட்டதோடு சரி. அப்புறம் ஆள் 'அம்பேல்' ஆகி விட்டார்.

''பேக்டரிக்கு ஆட்கள் தேவைதான். ஆனால் தொழிற்சாலை வேலை செய்ய ஆரம்பிக்க இன்னும் சில மாதங்கள் ஆகும். அதுவரை எப்படியாவது பல்லைக் கடித்துக் கொண்டு இங்கேயே இருங்கள்'' என்று சொல்லியிருக்கிறார் தொழிற்சாலையின் முதலாளி.

இவர்களுக்கோ பசிக் கொடுமை. குழந்தை குட்டிகளோடு எத்தனை நாளைக்கு வயிற்றில் ஈரத் துணியைப் போட்டுக் கொண்டு இருக்க முடியும்? மீண்டும் குடும்ப சகிதமாக எல்லோருமாய்ப் போய் முதலாளியிடம் அழுது புலம்பி முறையிட்டதற்குப் பின் அவரும் பரிதாபப்பட்டு ''வாரத்துக்கு 20 ரூபாய் தருகிறேன்'' என்று ஒப்புக் கொண்டு அதன்படி கொடுத்திருக்கிறார்.

முதலாளி பரிவு காட்டியதை வரவேற்கலாம் என்றாலும் ஒரு குடும்பத்திற்கு வாரம் 20 ரூபாய் எந்த மூலைக்கு?

இதோடு போயிற்றா? அந்தக் கிராமத்து மக்கள் இவர்களுக்கு எதிராகக் கிளம்பிவிட்டார்கள். 'தொழிற்சாலை தொடங்கினால்வேலை வாய்ப்பு அனைத்தும் இந்த அகதிகளுக்குக் கிடைத்துவிடும். பிறகு நம் பாடு என்னாவது?' என்ற எண்ணத்தோடு இவர்களுக்குப் பல வகைகளிலும் இடைஞ்சல் கொடுத்தார்கள்.

தண்ணீர் எடுக்கச் செல்லும் பெண்களிடம் தகாத முறையில் வம்பு செய்திருக்கிறார்கள்.

குடி தண்ணீர் எடுக்கும் கிணற்றில் பாம்பை அடித்துப் போட்டிருக்கிறார்கள்.

'இனியும் பொறுப்பதற்கில்லை' என்று எல்லோருமாய்க் கிளம்பிச் சென்னை ஓடி வந்து விட்டார்கள். சென்னை எழிலகக் கட்டட ஓரங்களில் வந்து கிடக்கும் இவர்களுக்கு சென்னை அரிமா சங்கமும் மற்றும் சில பொதுநல சங்கங்களும் உணவு கொடுத்துக் காப்பாற்றி இருக்கின்றன.

''எங்களுக்கு இங்கேயே ஏதாவது வேலை கேட்டுக் கலெக்டரிடம் முறையிட்டு வருகிறோம். இன்றுவரை ஒரு பலனுமில்லை'' என்கிறார்கள் இவர்கள்.

—ஆர்சி. சம்பத்

படம்: கதிரை துரை

# அகதிகள் படும் அவதி



## மந்திரிசபை மாற்றங்கள்

# சோமசுந்தரத்தின் சோகக்கதை



"**1977**ல் 210 கோடி ரூபாயாக இருந்த வணிக வரி வருவாய் 1983—84ல் 750கோடியாக உயர்ந்திருக்கிறது. இதற்குக் காரணம் வணிக வரி அதிகாரிகள் நட்சத்திர இரவு, சிறு சேமிப்பு என்று பணத்தை வணிகர்களிடமிருந்து வற்புறுத்திப் பெறாமல் இருக்கும்படி செய்ததுதான். இதனால் அரசின் வருமானம் உயர்ந்தது" — இவ்வாறு தமது இலாக்காவின் பெருமையைக் கூறிக்கொண்டார் வருவாய்த் துறை மந்திரி சோமசுந்தரம். இவ்வாறு திருச்சியில் அவர் சொன்ன இரண்டு மணி நேரத்துக்குள் சென்னையில் முதல்வரால் இலாகா மாற்றங்கள் அறிவிக்கப்படுகின்றன. வணிக வரி வருவாய்த் துறை சோமசுந்தரத்திடமிருந்து பிடுங்கப்படுகின்றன. என்ன காரணம்? திறமைக்கு ஏன் தண்டனை?

ஜெயலலிதாவின் வரவிற்குப் பிறகு கட்சியில் அடிமட்டத் தொண்டர்களிடமும் காளிமுத்து, சோமசுந்தரம் போன்ற தலைவர்களிடையேயும் மனக் கசப்பு இருந்து வந்தது வெளிப்படையாகத் தெரிந்த ஒன்று. ஆனால் சோமசுந்தரம், காளிமுத்து மேல் எந்த நடவடிக்கையும் எடுக்காமல் பல்வேறு கட்டங்களில் தள்ளிப் போட்டுக் கொண்டே வந்தார் எம். ஜி. ஆர். இடைத் தேர்தல்களுக்குப் பிறகு அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கும் எண்ணத்தை முற்றிலும் கைவிட்டு விட்டார் என்றே சொல்ல வேண்டும். ஆனால் சமீபத்தில் நடந்த ஒரு விஷயம்தான் எம்.ஜி. ஆரை இந்த இலாகா மாற்றத்திற்குத் தூண்டுவித்தது என்று கூறப்படுகிறது. தஞ்சாவூரில் நடைபெற்ற நன்றி அறிவிப்பு பொதுக்கூட்டத்தில் ஜெயலலிதா கலந்து கொண்டார். ஆனால் அந்தத்தொகுதியில் தேர்தல் பொறுப்பாளராக இருந்த சோமசுந்தரம் ஜெயலலிதாவுடன் பேசவில்லை. இத்தனைக்கும் கூட்டம் நடந்த அன்று அவர் தஞ்சையில்தான் இருந்தார். அவர் வாயை மூடிக் கொண்டு இருந்திருக்கலாம். ஆனால் மனிதர் 'ஜெயலலிதா வந்து பேசினால் நானும் பேச வேண்டும் என்று அவசியமில்லை' என்று கூறி விட்டார். வந்தது வம்பு. மேலும் நுழைவுத் தேர்வை அமுல்படுத்துவதையும் கடுமையாக எதிர்க்கிறாராம் சோமசுந்தரம். அதனால் தான் இலாகா மாற்றம். ஏற்கனவே சோமசுந்தரத்திடமிருந்த மதுவிலக்குத் துறையை முதல்வர் எடுத்துக் கொண்டார். இப்போது இன்னொரு முக்கிய துறையான வணிக வரியையும் எடுத்துக் கொண்டது சோமசுந்தரத்தின் ஆதரவாளர்களுக்கு அதிர்ச்சியைக் கொடுத்திருக்கிறது. இந்த மாற்றத்தைப் பற்றிக் கருத்துக் கேட்க சோமசுந்தரத்தை அணுகியபோது கருத்து எதுவும் கூற மறுத்து விட்டார். ஆனால் ரகசிய போலீஸார் சுற்றறிக்கையின்படி தஞ்சை—திருச்சியைச் சேர்ந்த எட்டு எம். எல். ஏ.க்கள் சோமசுந்தரத்தைச் சந்தித்ததாகவும் கட்சியிலிருந்து விலகி விடுமாறு சோமசுந்தரத்தை வற்புறுத்தியதாகவும் கூறப்படுகிறது. ஆனால் அவரோ 'சற்றுப் பொறுங்கள், தேர்தல் அறிவிக்கப்படட்டும்; அப்போது பார்க்கலாம்' என்று கூறினாராம். சோமசுந்தரத்தின் ஆதரவாளர்கள் இப்போது ஒவ்வொரு மாவட்டத்துக்கும் நிலைமையை அறிந்துவரச் சென்றிருக்கிறார்களாம்.

உணவு - விலைவாசித் துறையை சோமசுந்தரத்தின் தலையில் திணித்திருக்கிறார் முதல்வர். இப்போது நாடு இருக்கும் சூழ்நிலையில் கிடுகிடு என்றுஏறும் விலைவாசியைஎந்த மந்திரியாலும் தடுத்து நிறுத்த முடியாது. 'நிலைமையைச் சமாளிக்க முடியாத மந்திரி' என்று பழிசுமத்தி சோமசுந்தரத்தை ஒரேயடியாக ஒழித்துவிடுவது என்பது தற்போதைய திட்டமாம். ஒரு வெடிகுண்டின் திரியை முதல்வர் பற்றவைத்திருக்கிறார். வெடிக்குமா அல்லது புஸ்வாணமாகப் போய்விடுமா?

—நமது நிருபர்

## தெரிந்து கொள்ளுங்கள்

# நாயைக் கண்டால் பயமா?

பழக்கமில்லாத நாய்களைக் கண்டால் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை விளக்கி மிருக இம்சையைத் தடுக்கும் சங்கம் (SPCA) ஓர் அறிக்கை வெளியிட்டிருக்கிறது. இது தபால்காரர்கள், மின்சாரம், தண்ணீர் மீட்டர் கணக்கு எடுக்க வருபவர்களை உத்தேசித்து வெளியிடப்பட்டது என்றாலும், தெருவில் நடந்து போகும் எவருக்குமே உபயோகமாக இருக்கும்.

*1. நாயை உற்றுப் பார்க்காதீர்கள்.*

உற்றுப் பார்ப்பது ஓர் அச்சுறுத்தும் செயல். நாய் அதை ஒரு சவாலாகப் புரிந்து கொண்டு உங்களைத் தாக்கலாம். அதற்காக நாயை அலட்சியமும் செய்யாதீர்கள். சிநேக பாவத்துடனும், நன்னம்பிக்கையுடனும் பழகுங்கள். இது, நாய்க்கு உங்களைக் கண்டதனால் உண்டான பயத்தைக் குறைக்கலாம்.

*2. நாய்களைத் தாண்டியோ, எதிர்த் திசையிலோ ஓடாதீர்கள்.*

இது நாயின் துரத்தும் மனப்பான்மையைத் தூண்டி விடும். அப்புறம் நாய்க் கடிக்கு ஆளாக நேரிடலாம். நாய் உங்களைத் துரத்தும்போல் தோன்றினால் நாயைப் பார்த்துக் கொண்டே மெதுவாகப் பின்னோக்கிப் பாதுகாப்பான தூரம் வரை நடந்து செல்லுங்கள்.

*3. ஒரு நாயின் அருகில் செல்லும் பொழுது அது எப்படி நடந்துகொள்கிறது என்பதைக் கவனிக்கவும்.*

அது உட்கார்ந்த இடத்திலேயே இருந்தாலோ, அல்லது பின்வாங்கினாலோ அது உங்களை ஒரு அதிகார பூர்வமான விருந்தாளி என்று கருதுவதாகப் பொருள். அப்படிப்பட்ட நாய் உங்களைத் துரத்தப் பயப்படும்.

உங்களை நோக்கி வாலை ஆட்டிக் கொண்டு நடந்து அல்லது ஓடிவந்தால் அது சிநேக பாவம். அந்த நாய் உங்களைக் கடிக்காது.

ஆனால் உடம்பை விரைத்துக் கொண்டு, வாலை மேல் நோக்கி உயர்த்திப் பல்லைக் காட்டி உறுமி, உங்களைப் பார்த்துக் கொண்டு நின்றால் உஷார். அதன் பக்கத்திலேயே போகாதீர்கள்.

*4. மிகவும் நேசமான நாயும் குரைக்கும்.* குரைத்துக் காட்டித் தன்னுடைய ஆதிக்க வரம்பை நிலைநாட்டுவது அதன் சுபாவம். நாயிடம் பயப்படாமல் தைரியமாகப் பேசுங்கள். சிநேக பாவத்துடன் பக்கத்தில் வந்தால் அசங்காமல் நின்று உங்களை முகர்ந்து பார்க்க அனுமதியுங்கள்.

'குரைக்கிற நாய் கடிக்காது என்பது எனக்குத் தெரியும்; அந்த நாய்க்குத் தெரிய வேண்டுமே?' என்பது பழைய ஜோக். நாயின் இயல்புகளைப் புரிந்து கொண்டால் எளிதில் உங்களைப் பாதுகாத்துக் கொள்ளலாம்.

—ஜெயா வி. ராமன்

■ கல்கியில் பல ஆண்டுகளுக்கு முன் சோ எழுதிய தொடர்கதையில் ஒரு சம்பவம். ஆளை அடையாளம் தெரிகிறதா? சோவேதான்!



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

R.F. Mani

Editor: K. Rajendran

''தரத்தோடு விலையையும்
எம் மாதிரி நோட்டம்
பார்த்து வாங்குங்க,
கெட்டிக்கார்ரி நீங்கதான்''










# "நியூட்ரமுல் தான் என் கைராசி!"

''கண்ணை மூடிக்கிட்டு முடிவு பண்றவ நான் இல்லே. கண்முழிப்பா கவனிக்கறவளுக்குக் கிடைக்குது சகாய விலையிலே தரமான பண்டம்-- இதோ எனக்கு நியூட்ரமுல். ISI தரம் இருந்தாகணும், இருக்கா பார்ப்பேன். நியூட்ரமுல் ஒண்ணுக்குத் தானே அது இருக்கு, வேறெந்த கோக்கோ மால்ட் பானத்துக்கும் கிடையாதே. அதுவும், குடும்ப மனசுப்போல வாங்கக் குடுத்து வெச்சவ நான். எங்க வீட்டுலே கண்டிப்பா நியூட்ரமுல் தான் வேணும்''.

''விளம்பரக் கதைகள் எல்லாம் என் கண்ணுலே மண்ணைத் தூவும்படி விடமாட்டேன். எதையுமே நான் நேரிலே பார்த்துத்தான் வாங்குவேன்''.



மேலும்
லாபமடைவீர்!
வாங்குவீர் பெருஞ்
சிக்கன 1 கிலோ டின்
அல்லது வசதியான
200 கிராம் டின்.

| நியூட்ரமுல் | ரூ. 13.34 |
|---|---|
| போர்ன்விடா | ரூ. 20.48 |
| மால்டோவா | ரூ. 20.45 |
| பூஸ்ட் | ரூ. 21.57 |

மார்ச் '84 நிலவரப்படி 500 கி. கண்டெய்னர்களின் பேக்குகளுக்கான அதிகபட்ச உச்ச விலைகள். வரிகள் தனி.

daCunha/GCM/109(A)/84/TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka











அமிர்தாஞ்சன்
அறியும்
தலைவலியின்
கடுமையை



எளிதாகப் பூசிட ஏற்ற மிருதுவான
அடிப்படைபொருள் கொண்டது.




புத்தம் புதிய, கார்க்கினாலான உள் அமைப்பு
மருந்தின் சக்தியைப் பாதுகாக்கிறது

OBM 8703 TM





1984 ஒலிம்பிக் போட்டிகளில்
பங்கேற்கும் இந்திய விளையாட்டு
வீரர்களுக்கு அதிகாரபூர்வமாக
பெயின் பாம் சப்ளை செய்வோர்.

# அமிர்தாஞ்சன்

துரித நிவாரணம் உறுதியுடன் அளிப்பது.

தீய பின்விளைவுகள் இல்லாதது.